


# மிகவும் ருசிகரமானது இது நல்லது

போர்ன்-வீடாவில் 95 சதவிகிதம் எலும்பு வளர்ச்சிக்கும் ஜீவசக்தி அளிப்பதற்குமான சாக்குகள் இருக்கின்றன. தவிர அது ருசியாகவும் ஜீரணத்துக்கு தூண்டுகோலாகவும், எளிதில் ரத்தத்துடன் சேர்ந்து புஷ்டி தருவதாகவும் இருப்பதால் குறிப்பாக கர்ப்பிணிகளுக்கும் வியாதிக்குப்பின் குணமடையும் தருவாயிலும் இன்றியமையாத உணவாக விளங்குகின்றது.

## காட்பரீஸ்

# போர்ன்-வீடா

கால்ஷியம் விடமின்கள் நிறைந்தது

சாம்பிள்கள் வேண்டுமானால் எழுதவும்.

காட்பரி-ப்ரை (எக்ஸ்போர்ட்) லிட், (Dept    தபால் பெட்டி 1417-பம்பாய்.

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 } இதழ் 6 }  ஆகஸ்ட் 31  { சர்வசித்து { ஆவணி 15



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

# பிரபல திருமணம்



திருவாரூர் பிரபல வர்த்தகரும், மிராசுதாருமான A. N. இரத்தினம் பிள்ளை குமாரத்தி சௌ. கமலாம்பாளுக்கும், கத்திரிப்புலம் பிரபல மிராசுதார் சாம்பசிவம் பிள்ளை குமாரர் சிரஞ்சீவி சீனிவாச பிள்ளைக்கும், திருமணம் ஆகஸ்ட் 22-ந் தேதி வெகு விமரிசையாக நடந்தேறியது. பல பிரமுகர்கள் விஜயம் செய்தும், பரிசுகள், வாழ்த்துகள் அனுப்பியும், மணமக்களை ஆசீர்வதித்தனர். மாலை மின் N. A. சுந்தரம் கோஷ்டியாரின் இன்னிசையும் சிறப்பாக நடந்தேறியது.

இவ்வூர் நாடார் ஸரஸ்வதி ஹைஸ்கூலில் சுதந்திர தின கொடியேற்று விழா அதி விமரிசையாய் நடைபெற்றதுடன் மாணவ மாணவிகளுக்கு தின் பண்டங்கள் வழங்கப்பட்டு "ஜே" கோஷத்துடன் ஊர்வலம் வெகு சிறப்பாக நடைபெற்றது. இரவு நாடார்கள் பத்திரகாளியம்மன் கோவிலில் விசேஷ பூஜை செய்து அம்மன் சுதந்திரக் கொடியுடன் அலங்கரிக்கப்பட்டு நாதசுர வித்வான் கணேசன் அவர்களின் வாத்தியத்துடன் நகர்வலம் நடைபெற்றது. இவ் வைபவங்களில இவ்வூர் பிரபலஸ்தர்கள் ஸ்ரீ K. A. S. பாண்டித் துரைசாமி நாடார், ஸ்ரீ M. S. V. ராஜய்யா நாடார், ஸ்ரீ S. கடற்கரை நாடார் இன்னுமுள்ள முக்கியஸ்தர்கள் பலபேர்களும் கலந்து வெகு சிறப்பாக சுதந்திர தின விழாவை கொண்டாடினார்கள்.

தேனி
16—8—47




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 5

# என்ன சேதி?

## ாஞ்சாலத்தின் துயரம்

இந்தியாவின் சுதந்திரப் போர் 1919-ம்
ண்டில் நடந்த பாஞ்சாலப் படுகொலையி
ருந்து தீவிரமாக ஆரம்பித்தது. இந்தியா
சம் சுதந்திரத்தை அடைந்திருக்கும்
ந்தப் புண்ணிய வருஷத்தில், நாடெங்கும்
ண்டாட்டமாயிருக்கும் சமயத்தில்,
ஞ்சாலத்தில் பயங்கரமான படுகொலை
ளும் தீ வைத்தலும் மற்ற விபரீதங்களும்
ந்து வருவதாகச் செய்திகள் வந்து
ண்டிருக்கின்றன. இது யார் வைத்த
யோ, யார் மூட்டிய நெருப்பு என்பதைப்
ற்றி யெல்லாம் இப்போது நிர்மாணிக்க
டியாது. சரித்திரம் தீர்ப்பளிக்கும்.
ந்தி மகான் வங்காளத்துக்குப் போனது
றல் காயிதே ஆஜம் ஜின்னா பாஞ்சாலத்
க்குப் போயிருக்கக் கூடாதா என்று
ட்டும் யாருக்கும் தோன்றுவது இயல்பு.
ன் ஜாக்கிரதையாகப் போயிரா விட்டா
ம் பயங்கர சம்பவங்கள் நிகழும் செய்தி
ட்ட பிறகாவது உடனே விரைந்து
ன்றிருக்கலாம். கிழக்குப் பஞ்சாபிற்
ப் பல முறை ஜவாஹர் முதலிய தலை
கள் சென்று அமைதியை நிலை நாட்டு
ல் வெற்றி பெற்றிருக்கிறார்கள். ஆனால்
கில்தான் பஞ்சாபில் இன்னும் பயங்
ங்கள் தீர்ந்தபாடில்லை என்று தெரிகிறது.
ந்தின நாள் கழித்து, 28உ வரையில்
ந்திருந்துவிட்டு, கவர்னர் ஜெனரல்
ன்னா லாகூருக்குப் போயிருக்கிறார். இனி
லாவது பாஞ்சாலத்துக்குக் கதிமோட்
பிறக்கும் என்றும், புதிய பாகிஸ்
ன் சர்க்காருக்கு ஏற்பட்ட களங்கம்
ளவுடன் நிற்கும் என்றும் எதிர்பார்க்
றோம். பயங்கரத் துன்பங்களுக்கு
ளான ஐந்து நதி பாயும் பாஞ்சாலத்
க்கு நமது மனமார்ந்த அனுதாபத்
த் தெரிவித்துக் கொள்கிறோம்.

## முழுவதும் போகலாம்

சீனக் குடியரசுத் தலைவர் ஜெனரல் சியாங்கே ஷேக் அமெரிக்காவிடம் 20 கோடி டாலர் கடனும் ராணுவ உதவியும் கேட்டிருக்கிறாராம். பீரங்கிகள், வெடிகுண்டு விமானங்கள், டாங்குகள் முதலியன ஆயிரக் கணக்கில் அவருக்கு வேண்டுமாம். நல்ல வேளையாக அமெரிக்கத் துருப்புகளையும் கொஞ்சம் அனுப்பி வைக்கும்படியாகச் சொல்லவில்லை!

கடனுகக் கேட்கும் மேற்படி பணத்துக்கு ஈடாக, முக்கியமான சீன ராணுவ தளங்களை யெல்லாம் அமெரிக்காவுக்குக் குத்தகைக்கு விட ஜெனரல் சியாங் ஒப்புக் கொண்டிருக்கிறாராம்.

ராணுவ தளங்கள் மாத்திரம் என்ன? சீனக் கம்யூனிஸ்டுகளை நிர்மூலமாக்கும் விஷயத்தில் ஜெனரல் சியாங்-கே-ஷேக் செய்து வரும் முயற்சியைப் பார்க்கும் போது, சீனு முழுவதையுமே அவர் அமெரிக்காவுக்குக் குத்தகைக்கு விட்டுவிட்டாலும் அதிசயப்படுவதற்கு இல்லை!

## கடன் கொடுக்கட்டும்!

இப்படி சீனு அடிக்கடி அமெரிக்காவிடம் வலியப் பணம் கேட்டு வாங்குகிறது. ஆனால், அமெரிக்காவோ இந்தியாவுக்குப் பொருள் கொடுப்பதாக வலியச் சொல்லுகிறது. ஒரு முறை அல்ல, இரு முறை அல்ல, பல முறை சொல்லி யிருக்கிறது. நாம் அதைப் பொருட்படுத்தாமல் இருந்த போதிலும், "ஐயோ, கொஞ்சம் வாங்கிக் கொள்ளுங்களேன்! — கொஞ்சம் ஒரு பத்துக் கோடி டாலர் வாங்கிக் கொள்ளுங்கள்!—என்ன, வாங்கிக் கொள்ளமாட்டீர்களா? இதோ 'செக்' கொடுக்கிறேன். நீங்கள் நன்றாக இருக்க வேண்டும்; உங்கள் தேசத்திலே செல்வமும் தொழி

னும் பெருக வேண்டும் என்பதுதான் எங்களுடைய ஒரே ஆவல்!'' என்கிறது.

இந்தியாவுக்கு அமெரிக்க ஸ்தானிகராக வந்திருக்கும் டாக்டர் ஹென்றி கிரேடிகூட சென்ற வாரம் டில்லியில் செய்த பிரசங்கத்திலே அந்த மாதிரியாகவே வேண்டிக் கொண்டார்.

இந்தியாவுக்கு உண்மையாகவே கடன் கொடுக்க வேண்டும் என்று அமெரிக்கா விரும்பும் பட்சத்தில், அதை ஏற்றுக் கொள்ள இந்தியா தயாராகவே இருக்கிறது. ஆனல், அந்தக் கடன் டாலர் அல்ல, பவுன் அல்ல; அதைக் காட்டிலும் முக்கியமானதும் ஜீவாதாரமுமான உணவுப் பொருள்!

பஞ்சத்தாலும் பட்டினியாலும் தவித்துக் கொண்டிருக்கும் இந்திய மக்களுக்கு அமெரிக்கா உணவுப் பொருளைக் கடனாக வாவது கொடுத்து உதவினல்தான் இந்தியாவின் மீது அதற்கு நல்லெண்ணம் இருப்பதாக நாம் நம்ப முடியும்.

## இட்டதே சட்டம்!

ஓஹோஹோ! செக்ஷன் 93-ஆ? எங்கே, இப்படி வாரும்! உம்முடைய முகத்தைக் கொஞ்சம் காட்டும்! நீர் இன்னும் கப்பல் ஏறவில்லையா? அதிர்ஷ்டக்கார ஐயா, படு அதிர்ஷ்டக்காரர்!

கொஞ்ச காலமாகக் காயிதே ஆஜ ஜின்னு எல்லைப்புற மந்திரி சபையை என்ன செய்வதென்று தெரியாமல் விழித்து கொண்டிருந்தார். டாக்டர் கான் சாகிப்பை அவர் தட்டிக் கொடுத்துப் பார்த்தார் ஆனல், கான் சாகிப் அவருடைய வலையில் விழவில்லை. கடைசியில், உ ரு த் து போன செக்ஷன் 93 அவருக்குக் கை கொடுத்து உதவியிருக்கிறது.

காயிதே ஆஜம் ஜின்னு, செக்ஷன் 9 மூலம் டாக்டர் கான்சாகிப் மந்திரி சபை 'டிஸ்மிஸ்' செய்திருக்கிறர். பிரிட்டி காரர்கள் வெளியே போய் விட்டாலும் செக்ஷன் 93-ஐ மாத்திரம் அவர்கள் பி சார்ஜிதமாகப் பாகிஸ்தானுக்குக் கொடுத் விட்டுப் போயிருக்கிறர்கள் போலும்!

இப்படி செக்ஷன் 93-ஐப் பிரயோகித் ஒரு மந்திரி சபையை 'டிஸ்மிஸ்' செய் சட்டத்தில் இடம் இல்லை.

சட்டத்தில் இடம் இருந்தாலும் இல் விட்டாலும், ஹிஸ் எக்ஸலென்ஸி காயிதே ஆஜம் ஜின்னு அவர்கள் இட்டதே பாகி தான் சட்டமாக இருக்கலாம்!

நிகழ்ச்சிச் சித்திரம் -சாஸ்திரி

போன பிள்ளையாண்டான் திரும்புகிறார்!

அப்பா, நல்ல பிள்ளையல்லவா நீ?
திரும்பி வந்து விடுவாய்
என்பது எனக்கு முன்பே
தெரியுமே!

ஸ்மட்ஸின் கோர தாண்டவம்

அந்தத் தீர்மானத்தை
எறியுங்கள் குப்பைக் கூடையில்

# தூவானம் விடவில்லை

தலைவலி ஆரம்பமாகி விட்டது.

யாருக்கு? ஒருவருக்கா அல்லது பலருக்கா? இல்லை; உலகத்துக்கே தான், — இருநூறு கோடி மக்களுக்கும்தான் தலைவலி ஆரம்பமாகி யிருக்கிறது!

உலகத்திலே யுத்த வெறியை ஒழித்து, அமைதியையும் ஒழுங்கையும் ஏற்படுத்துவதற்காக வென்றே ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் சிருஷ்டிக்கப்பட்டது.

டாக்டரே நோய்க்கு இரையாகி விட்டால், நோயாளியின் கதி என்னவாகும்?

உலகத்தின் நோயைத் தீர்ப்பதற்காக உற்பத்தியான சர்வ தேச ஸ்தாபனத்தையே நோய் ஆட்கொண்டு விட்டால், பின்னர் உலகம் உய்வது எப்படி?

முதலாவது உலக மகா யுத்தத்துக்குப் பின் படுகுழியில் வீழ்ந்து கிடந்த ஜெர்மனியை, அகில உலகமும் பார்த்துப் பொறாமைப்படக் கூடிய ஒரு வல்லரசாக்கிய பெருமை ஹிட்லர் ஒருவருக்கே உரியது.

ஆனால், அதை ஆக்கிய அதே ஹிட்லர்தான் அதன் அழிவுக்கும் காரணமானார்.

அது போலவே, இத்தாலியின் அற்புத முன்னேற்றத்துக்குக் காரண புருஷரான முஸோலினிதான் அதன் அழிவையும் பூர்த்தி செய்தார்.

சென்ற மகா யுத்தம் காரணமாக வலிவும் பொலிவும் இழந்து கிடக்கும் உலகத்துக்குப் புத்துயிரளித்து அதைப் புனருத்தாரணம் செய்வதற்காகவே ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் ஜனனமாயிற்று.

ஆனால், அதன் சிருஷ்டி கர்த்தாக்களே இன்று அதன் அழிவுக்கும் அடிகோலி வருகிறார்கள்.

மேற்படி உலக ஸ்தாபனத்தின் உற்பத்தியில் பிரமாதமாக உற்சாகங் காட்டிய ஆரம்ப சூரர்களில் தென்னாப்பிரிக்கா பிரதம மந்திரியும், சுயநல ராஜதந்திரத்தில் பழம் பெருச்சாளியுமான ஜெனரல் ஸ்மட்ஸும் ஒருவர்.

ஆனால், மேற்படி ஸ்தாபனத்தின் செல்வாக்கு சிதைவதற்கு இப்போது முதலாவதாக விதை விதைப்பவரும் அவர்தான்.

* * *

சில மாதங்களுக்கு முன் ஐக்கிய நாடுகள் சபையில் இரண்டு முக்கிய தீர்மானங்கள் நிறைவேறியதை வாசக நேயர்கள் மறந்திருக்க முடியாது.

அந்த இரண்டும் தென்னாப்பிரிக்கா சம்பந்தமானவைதான்.

1. தென் மேற்கு ஆப்பிரிக்காவையும் தென்னாப்பிரிக்காவுடன் இணைத்துக்கொள்ள வேண்டும் என்ற ஸ்மட்ஸின் அநீதியான கோரிக்கையை ஐ. நா. சபை நிராகரித்தது. தென் மேற்கு ஆப்பிரிக்கா சர்வ தேச தர்ம கர்த்தாக்களின் மேற் பார்வையில் இருந்து வரவேண்டும் என்றும் அந்தச் சபை முடிவு செய்தது.

2. தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களுக்கு விரோதமாக அனுஷ்டிக்கப்பட்டு வரும் கொடிய நிற வெறிக் கொள்கையை ஐ. நா. சபை கண்டித்ததுடன், தென்னாப்பிரிக்காவின் நடவடிக்கை, தென்னாப்பிரிக்கா—இந்தியா ஒப்பந்தங்களுக்கும் ஐக்கிய நாடுகளின் பிரகடன விதிகளுக்கும் முரண்பாடாக இருக்கக் கூடாதென்றும் கட்டளை பிறப்பித்தது.

ஜெனரல் ஸ்மட்ஸோ வென்றால், மேற்படி இரு தீர்மானங்களையும் காற்று வாக்கில் விட்டுவிட்டார். ஸ்மட்ஸ் கெட்டிக்கார ராகையால், ஐ. நா. சபையின் தற்போதைய போக்கை நன்கு அறிந்தே அவ்வாறு செய்யத் துணிந்திருக்கிறார்.

மற்றும் அவர் அத்துடன் நில்லாமல், நிற வேற்றுமை தென்னாப்பிரிக்கா சர்க்காரின் அசைக்க முடியாத கொள்கை யென்றும் பெருமையுடன் பறை சாற்றுகிறார்.

சென்ற வருஷம் டிசம்பர் மாதம் மேற்படி தீர்மானம் ஐ. நா. சபையின் விவாதத்துக்கு வந்தபோது, பிரிட்டனும், அமெரிக்காவும், தென்னாப்பிரிக்கா

வுக்கு ஆதரவாக இருந்து வந்ததை ஸ்மட்ஸ் மறந்து விடுவாரா, என்ன?

போதாக்குறைக்கு, டச்சு — இந்தோனேஷ்யா தகராறு சம்பந்தமாக இப்போது அமெரிக்காவும் பிரிட்டனும் கையாண்டு வரும் முறைகள், ஸ்மட்ஸுக்கு மேற்படி சபையின் தீர்மானத்தைப் புறக்கணிக்கும் தைரியத்தைக் கொடுத்திருக்கின்றன வென்று நிச்சயமாகக் கூறலாம்.

எனவே, சர்வதேச ஸ்தாபனத்தின் சிருஷ்டி கர்த்தாக்களான அமெரிக்க, பிரிட்டிஷ் சர்க்கார்களும் ஜெனரல் ஸ்மட்ஸுமே அதன் சம்ஹார கர்த்தாக்களாகி விடுவார்களோ என்றே சந்தேகப்பட வேண்டியிருக்கிறது.

* * *

அடுத்தபடியாக, இந்தோனேஷ்யப் பிரச்னை சம்பந்தமாகவும் ஐ. நா. சபை அநீதியாக நடந்து கொண்டிருக்கிறது.

ஏகாதிபத்திய வெறி பிடித்த நாடுகளின் அக்கிரமங்களை அம்பலப்படுத்திக் கண்டிக்க ஐ. நா. சபையில் ருஷ்யாவைத் தவிர வேறெந்த வல்லரசும் தயாராக இல்லையென்பது இப்போது நன்கு தெரிந்துவிட்டது.

அன்னிய நாட்டுத் துருப்புகள் இந்தோனேஷ்யர்களைப் படுகொலை செய்து வருவது சகிக்க முடியாத அட்டூழியமா, அல்லவா என்பதுதான் இப்போது கேள்வியாகும்.

ஆனால், அக் கேள்விக்கு பிரிட்டன் முதலிய வல்லரசுகள் நேரடியாகப் பதில் அளிக்காமல், தொன்னைக்கு நெய் ஆதாரமா அல்லது நெய்க்குத் தொன்னை ஆதாரமா என்ற ரீதியில், இந்தோனேஷ்யக் குடியரசு சட்டபூர்வமானதா, இல்லையா என்ற அர்த்தமற்ற விபரீத ஆராய்ச்சியில் ஈடுபட்டு ஐ. நா. சபையின் கௌரவத்தைச் சீர்குலைத்து வருகின்றன.

இந்தோனேஷ்யாவில் இரு சாராரும் யுத்தத்தை நிறுத்த வேண்டுமென மேற்படி சபையில் சில நாட்களுக்கு முன் ஒரு தீர்மானம் நிறைவேறியதல்லவா? அந்தத் தீர்மானத்தையும் டச்சு சர்க்கார் சட்டை செய்ததாகத் தெரியவில்லை.

இந்தோனேஷ்யர்கள் தொடர்ந்து டச்சுக்காரர்களின் மிருக பலத்துக்குப் பலியாகி வருவதுடன், டச்சு சர்க்கார் தாங்கள் பிடித்த பிரதேசங்களையும் பலப்படுத்தி வருகிறார்களாம்.

முன்னர் நிறைவேறிய தீர்மானத்தின்படி இரு சாராரும் நடந்து கொள்ளுகிறார்களா வென்பதைக் கண்காணிப்பதற்காக ஐ. நா. பாதுகாப்பு சபை ஒரு கமிஷனை அனுப்ப வேண்டும் என்ற ருஷ்யாவின் யோசனைக்குக் கூடப் பிரான்ஸ் முட்டுக்கட்டை போட்டு விட்டது.

இறுதியாக டச்சுப் பிரதிநிதிக்குத் திருப்தியை அளிக்கக் கூடிய விதத்திலேயே கண்டிப்பான கட்டளைகள் எதுவுமின்றி தீர்மானங்கள் நிறைவேறியிருக்கின்றன.

அந்தத் தீர்மானங்கள் அநீதியானவை என்பதை ருஷ்யப் பிரதிநிதியும் இந்தியப் பிரதிநிதியும் சுட்டிக் காட்டியிருப்பதுடன், பொதுவாக ஐ. நா. சபையின் போக்கையும் கண்டித்திருக்கிறார்கள்.

"இந்தோனேஷ்யாவில் இரு சாராரும் உடனே யுத்தத்தை நிறுத்த வேண்டுமென்று இச்சபை கட்டளையிட்டதைக் கண்டு உலகமே சந்தோஷம் அடைந்தது. ஆனால், இப்போதோ உலகத்தின் சந்தோஷம் அற்ப சந்தோஷமாகும்படி இச்சபை செய்துவிட்டது. அதாவது டச்சுக்காரர்கள் தங்களுடைய சூழ்ச்சியில் வெற்றி பெற்று விட்டார்கள்.

"டச்சு—இந்தோனேஷ்ய விவகாரத்தில் நாங்கள் பிரதிவாதி யென்று டச்சுப் பிரதிநிதி கூறிக்கொண்டார். எனவே, வழக்கு விசாரணை எவ்வாறு நடைபெற வேண்டும் என்ற விஷயத்தில் பிரதிவாதியின் அபிப்பிராயப்படி நடந்துகொள்ள இச்சபை இசைந்து விட்டது என்றாகிறது!

"ஒரு தேச ஜனங்களை அடிமைகளாக்குவதும், அவர்களைக் கூட்டம் கூட்டமாகப் பலியிடுவதும், எளிய நாடுகளை வலிய நாடுகள் வாட்டுவதும் சகிக்கக்கூடிய விஷயங்களா? அவை அக்கிரமங்கள் தான் என்பதற்குச் சட்ட நுணுக்கங்களை ஆராய வேண்டுமா?

"முன்னர் சீனா மீது ஜப்பான் போர் தொடுத்த போதும் சர்வதேசச் சங்கம் இவ்விதமேதான் குறுகிய நோக்கத்துடன் நடந்து கொண்டது. அதன் வினை உலகத்தை என்ன பாடு படுத்தி விட்டதென்பதை நாமெல்லோரும் அறிவோம். இப்போதும் அத்தகைய தடுமாற்றத்தினாலும் சலன புத்தியினாலும் உலகம் படுகுழியில் விழும்படி நேராதிருக்குமாக!"

இந்தியப் பிரதிநிதியான ஸ்ரீ பி. பி. பிள்ளை மேற்கூறிய விதம் ஐ. நா. சபையில் வல்லரசுகளின் விபரீதப்

போக்கை ஆணித்தரமாகக் கண்டித்திருப்பது மிகவும் பாராட்டத்தக்கதாகும்.

“அட பாவமே! உட்ரோ வில்ஸன், பிராங்க்ளின் ரூஸ்வெல்ட் போன்ற அமெரிக்கத் தலைவர்கள் அளித்த உறுதி மொழிகள் எங்கே போயின? உலகில் ஏகாதிபத்திய வாதிகளின் ஆதிக்கத்திற் குட்பட்டும், துன்புறுத்தப்பட்டும் வாடும் ஜனங்களுக்கு உதவி செய்வதே அமெரிக்காவின் கடமையாக இருக்க வேண்டும். ஆனால், இன்று நாம் காண்பதென்ன? இந்தோனேஷ்யக் குடியரசை இரத்த வெள்ளத்தில் மூழ்கடித்து வரும் டச்சுக்காரர்களுக்கு, அமெரிக்காவின் செல்வாக்கிற்கு உட்பட்ட சர்வ தேச பாங்கி பெருந் தொகை கடனைக் கொடுத்திருக்கிறதே!” என்று அமெரிக்க செனேட் சபை அங்கத்தினரான கிளாட் பெப்பர் வருந்தி யிருக்கிறார்.

அமெரிக்காவின் இன்றைய போக்கை அமெரிக்கப் பிரமுகர்களில் கூட சிலர் ஆதரிக்கவில்லை யென்பதையே அது காட்டுகிறது.

* * *

எரிகிற கொள்ளியில் எந்தக் கொள்ளி நல்ல கொள்ளி?

மண்ணாசை ஒன்றையே லட்சியமாகக் கொண்ட ஏகாதிபத்திய வெறியர்களில் நல்லவர்கள் இருக்க முடியுமா?

சுமார் நூற்றைம்பது வருஷங்களுக்கு முன் பிரான்ஸ் தேசம் மானிட வர்க்கத்துக்கு ஓர் அரிய மந்திரத்தை உபதேசம் செய்தது.

பிரஞ்சுப் புரட்சியின் பயனாக உருவான அந்த மந்திரம்தான் ‘சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்’ என்பது.

ஆனால், அதே பிரான்ஸ்தான் இன்று அரசியல் ஊழல்களில் அக்ர ஸ்தானம் வகித்து வருவதுடன், மேற்படி மந்திரத்துக்கு முற்றிலும் முரணாக ஏகாதிபத்திய வெறியும் பிடித்து அலைந்து வருகிறது.

உலகத்தில் ஐந்தில் ஒரு மடங்கு பிரதேசத்தைக் கட்டியாண்ட பிரிட்டிஷார் கூட, லட்சக்கணக்கான சதுர மைல்கள் விஸ்தீரணமுள்ள இந்தியாவை இந்தியர்களிடம் ஒப்புவித்து விட்டு ஊருக்குச் செல்லுகின்றனர்.

தங்கமான மேற்படி காரியத்தைக் கண்ணெதிரில் கண்ட பின்னரும் கூட பிரஞ்சு சர்க்காருக்குப் புத்தி வராதது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது.

இந்தியாவில் தங்களுடைய ஆதிக்கத்தின் கீழுள்ள ஐந்து ஊர்களுக்கும் அரசியல் சீர்திருத்தங்கள் வழங்கப் போவதாகப் பிரஞ்சு சர்க்கார் கூறுவது மிகவும் விசித்திரமான ஒரு கூத்தல்லவா?

இந்தியாவில் பிரஞ்சு ஆதிக்கத்தின் கீழுள்ள எல்லா ஊர்களையும் சேர்த்தாலும் சென்னை நகரில் மூன்று அல்லது நான்கில் ஒரு மடங்குதான் இருக்கும். இதற்குத்தான் அரசியல் சீர்திருத்தமாம், தனி அரசாங்கமாம்!

இந்தியாவில் மகத்தான பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கே இடமிராத போது, பிரஞ்சு சர்க்காரும், போர்ச்சுகல் சர்க்காரும் தங்களுடைய குட்டி சாம்ராஜ்யங்களை நிலை நிறுத்தியே தீருவோம் என்று வீம்பு பேசுவதை என்னவென்று கூறுவது?

பிரான்ஸில் இப்போது தொழிற் கட்சியினரே அதிகாரத்தில் இருக்கின்றனர். அப்படியிருந்தும் இந்தியாவிலும், இந்தோசீனாவிலும், மடகாஸ்கரிலும் நடக்கும் பிரஞ்சு சர்க்காரின் ஆர்ப்பாட்டங்கள் பிரிட்டிஷ் கன்சர்வேடிவ் கட்சி சர்க்கார் ஆட்சியையும் தூக்கியடிப்பதாக இருக்கின்றன.

* * *

மழை விட்டும் தூவானம் விடவில்லை.

பிரிட்டன் இந்தியாவுக்குச் சுதந்திரம் அளித்து விட்டது. பர்மாவுக்குச் சுதந்திரம் அளிக்கப் போகிறது.

இனி அன்னிய நாடுகளின் இஷ்டத்துக்கு விரோதமாக அவைகளைக் கட்டியாள்வது அனர்த்தமாக முடியுமென்று தீர்க்காலோசனையுடனேயே பிரிட்டன் ஏகாதிபத்தியக் கொள்கையை மாற்றிக் கொள்ள ஆரம்பித்திருக்கிறது.

அப்படியிருந்தும் கூட, இன்னும் சில நாடுகள் சாம்ராஜ்ய சபலத்தைத் துறக்க முடியாமல் உலக அமைதிக்கே பங்கம் விளைவித்து வருவதும், அவற்றிற்கு வல்லரசுகள் இன்னும் கூட மறைமுகமாக ஆதரவளித்து வருவதும், மகா யுத்தங்களுக்கு முக்கிய காரணமான மண்ணாசைக்கு ஊக்கமளிப்பதாகவே இருக்கின்றன.

இந்நிலைமையில், உலகில் அமைதியை நிலை நிறுத்துவதற்கென்று பிரமாத பூர்வபீடிகையுடன் உருவான ஐ. நா. ஸ்தாபனம் உருப்படுவது எப்படி?

# ஆனந்த நகரம்

கல்கி

இரவு பன்னிரண்டு மணி எப்போது அடிக்கும் என்று நாங்கள் மிக ஆவலோடிருந்த போதிலும், காத்திருந்த நேரத்தை வீணாகக் கழிக்கவில்லை. பாலிகஞ்ச் — காஸ்மாபாலிடன் கிளப்பில் நடந்த சுதந்திரக் கொண்டாட்ட நிகழ்ச்சிகளைப் பார்ப்பதில் நேரம் ஆனந்தமாகத்தான் சென்றது.

மேற்படி கிளப்பில் பாதிப் பேருக்குமேல் தென்னிந்தியர்கள்; மற்றவர்கள் வடநாட்டினர். எல்லாருமாகச் சேர்ந்து சுதந்திரத் திருநாளைச் சிறப்பாகக் கொண்டாடுவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

விழாவின் ஆரம்பத்தில் குழந்தைகளின் மாறுவேடப் போட்டி நடந்தது. குறத்தி, தயிர்க்காரி, பால கிருஷ்ணன், பீடி சுருட்டு நெருப்புப் பெட்டி விற்பவன், — இப்படிப் பல வேடங்கள். யாருடைய வேடம் நன்றாகப் பலித்திருக்கிறதோ, அந்த வேடத்திற்குப் பரிசு. இதைத் தீர்மானிப்பதில் பெண்மணிகளுக்கெல்லாம் ஒரே பரபரப்பு. கடைசியில், குறத்தி வேடம் போட்ட பெண்ணுக்கு முதற் பரிசு கிடைத்தது! ஆஹா! குறத்தி எப்போதுமே அதிர்ஷ்டக்காரிதான்! முருகப் பெருமானைக் கணவனாக அடைந்தவள் அல்லவா?

பிறகு அரங்க மேடையின் பக்கம் எல்லாருடைய கவனமும் சென்றது. வெளித் திரையை அகற்றியதும் உள்ளே ஓர் அபூர்வமான காட்சி தென்பட்டது. கடவுள் உலகத்தை அமைக்கும்போது மற்றத் தேசங்களையெல்லாம் ஏதோ கன்னாபின்னாவென்றும் கோணல் மாணலாகவும் அமைத்து விட்டிருக்கிறார். நமது சின்ன அண்ணாமலையின் ஹாஸ்ய பாஷையில், சில தேசங்களைப் படத்தில் பார்த்தால் 'அவசரத்தில் பிடித்த கொழுக்கட்டை' மாதிரி இருக்கிறது! ஆனால் இந்தியாவை அமைக்கும்போதோ, பகவான் ஒரு சிறந்த சைத்திரிகனாகி, சௌந்தரிய வடிவமாக அமைத்திருக்கிறார்! இந்தியாவின் அமைப்பு எவ்வளவு அழகானது என்பது அன்றைக்குத்தான் எனக்கு நன்றாய்த் தெரிந்தது. இந்தியாவின் எல்லைக் கோட்டைக் கறுப்புத் திரையில் வகுத்துக் காட்டி அதில் பாரத மாதாவை நிற்கச் செய்திருந்தார்கள். திரை தூக்கியபோது, பாரதமாதா கையிலும் காலிலும் விலங்கு பூட்டப்பட்டுத் தலை குனிந்து நின்று கொண்டிருந்தாள். திரையைத் தூக்கியவுடனே, தேசத் தொண்டர் இருவர் விலங்கை உடைத்து அகற்றினார்கள். விலங்கு அகன்றதும், பாரதத்தாய் தலை நிமிர்ந்தாள். அவளுடைய திருக்கையிலே இருந்த கொடியும் உயர்ந்தது. சபையில் 'ஜே ஹிந்த்' முழக்கம் வானளாவி எழுந்தது. அதே சமயத்தில் அரங்கமேடையில் ஒவ்வொரு இந்திய மாகாணத்துக்கும் பிரதிநிதியாக அந்தந்த மாகாணத்து உடை யணிந்து நின்ற எட்டுப் பெண்கள் தேசிய கீதம் பாடினார்கள்.

இந்த அரிய காட்சிக்குப் பிறகு பல சங்கீதக் கச்சேரிகள், பலவகை நடனங்கள், இந்திய சுதந்திரப் போரை விவரிக்கும் நிழல் ஆட்டம், — முதலிய பல நிகழ்ச்சிகள் நடைபெற்றன. பாரததேவியின் சுதந்திர தர்பாரில் தமிழ் நாட்டுப் பரத நாட்டியமும் நடைபெற்றது என்பதை மகிழ்ச்சியுடன் குறிப்பிடுகிறேன். பரத நாட்டியம் ஆடிய பெண் யார் தெரியுமா? நமது மகாகவி பாரதியாரின் உறவினரான கர்னல் அண்ணாசாமியின் குமாரி மீரா.

* * *

மணி பன்னிரண்டு அடித்ததும் 'பாரத மாதா'வின் தகப்பனாரிடம் நாங்கள் விடை பெற்றுக்கொண்டு, கவர்ன்மெண்ட் மாளிகைக்குப் பிரயாணமானோம்.

பாரத மாதாவின் தகப்பனார் யார் தெரியுமா? புகழ்பெற்ற பொருளாதார நிபுணரும் "இண்டியன் பைனான்ஸ்" அதிபருமான ஸ்ரீ சி. எஸ். ரங்கசாமி அவர்கள்தான். பழைய காலத்தில் அதிகாரவர்க்க ஆட்சி நடந்து கொண்டிருந்தபோது, இந்திய சர்க்காரின் வரவு செலவு அக்கத்தி



லாபம் ஒரு கோடி...... !

னர்கள் சில சமயம் 'ஸிம்ம சொப்பனம்' காண்பார்களாம்! அவர்களுடைய சொப்பனத்திலே வரும் ஸிங்கத்துக்கு முகம் ஸ்ரீ ஸி. எஸ். ரங்கசாமியின் முகமாயிருக்குமாம்! இந்திய சர்க்காரின் வரவு செலவுத் திட்டம் தயாரிக்கும்போது அவர்கள் இந்தியச் சட்ட சபை அங்கத்தினர்கள் என்ன கண்டனம் செய்வார்களோ என்று கவலைப்படுவதில்லையாம். "இண்டியன் பைனான்ஸ்" என்ன எழுதுமோ என்றுதான் பீதி கொண்டிருப்பார்களாம். பீதி எதற்காக என்று கேட்கிறீர்களா? வரவு செலவுத் திட்டத்தை ஸி. எஸ். ஆர். தாக்குகிறபடி தாக்கிவிட்டால், ஷேர் மார்க்கெட் நிலை குப்புற விழும். சர்க்கார் கடன் பத்திரங்களின் மதிப்பு மட மட வென்று இறங்கும். பாங்கிகளில் பணம் போட்டவர்கள் சடசட வென்று பணத்தை வாங்கப் பார்ப்பார்கள். பாங்கியின் கதவுகளைத் தட தட வென்று சாத்துவார்கள்! — இந்த மாதிரி எத்தனையோ விபரீதங்கள் நேரிடலாம்!

அன்று மாலை சுதந்திர விழா நிகழ்ச்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்தபோது ஸ்ரீ ஸி. எஸ். ரங்கசாமி என்னிடம் ஒரு கேள்வி கேட்டார். "கல்கத்தாவில் சென்ற வாரத்தில் அதிகமாக வியாபாரம் ஆனது எது தெரியுமா?" என்றார். அவர் எதைப் பற்றிக் கேட்கிறார் என்பதை ஊகித்துக்கொண்டு, "தேசியக் கொடி வியாபாரம்" என்றேன். "சரிதான்; தேசியக் கொடி வியாபாரம் எத்தனை ரூபாய்க்கு ஆகியிருக்கும் சொல்லுங்கள், பார்க்கலாம்!" என்று கேட்டார். அதிகமாகவே சொல்லி வைக்கலாம் என்று எண்ணிக்கொண்டு, "பத்து லட்சம் ரூபாய்க்கு இருக்கலாம்!" என்றேன். ஸி. எஸ். ஆர். புன்னகை புரிந்தார். "ஒரு வேளை பத்து லட்சத்துக்கும் அதிகமா?" என்று கேட்டேன். "கல்கத்தா வர்த்தகர்கள் கோடி வியாபாரத்தில் லாபம் மட்டும் ஒரு கோடி ரூபாய் சம்பாதித்திருக்கிறார்கள்!" என்றார் ஸ்ரீ ரங்கசாமி.

இது திகைக்கச் செய்யக்கூடிய புள்ளி விவரந்தான். எனினும், நான் மூர்ச்சை போட்டு விழுந்துவிடவில்லை. ஏனெனில், சென்ற நாலைந்து தினங்களில் கல்கத்தா நகரில் சுற்றி அலைந்தபோது, அங்கங்கே காலியாய்க் கிடந்த இடங்களிலெல்லாம் வரிசை வரிசையாகப் புதிய தேசியக் கொடிகள் தொங்குவதைக் கண்டோம். சாயம் தோய்த்து உலர வைப்பதற்காக அப்படித் தொங்கவிட்டிருந்தார்கள். அந்தக் காட்சியில் சிலவற்றை நமது போட்டோக்கார கணேசன் படமும் பிடித்தார்.

விஷயம் என்னவென்றால், ஆகஸ்டு 15உ என்ன நடக்குமோ என்று ஒரு பக்கம் கவலை இருந்தபோதிலும் மற்றொரு பக்கத்தில் கல்கத்தா மக்கள் சுதந்திரத் திருநாளைப் பிரமாத உற்சாகத்துடன் கொண்டாடுவதற்கு ஏற்பாடுகள் செய்து கொண்டு வந்தார்கள். கல்கத்தா, நாற்பது லட்சம் ஜனங்கள் வசிக்கும் மாநகரம். இந்த நாற்பது லட்சத்தில் முப்பது லட்சம் பேர் ஹிந்துக்கள். இவர்கள் ஆகஸ்டு 15உ சுதந்திரத் திருநாளை மற்ற எந்த நகரத்து மக்களையும்விட அதிக உற்சாகத்துடன் கொண்டாடுவதற்குக் காரணம் இருந்தது.

சென்னையையும் பம்பாயையும் உதாரணத்துக்கு எடுத்துக் கொள்ளலாம். இந்த நகரங்களில் உள்ள ஜனங்கள் சுதந்திரத் திருநாளை உற்சாகமாகத்தான் கொண்டாடினார்கள். ஆனால் இவர்கள் தாங்கள் சுதந்திரம் அடைந்ததை மனதில் கற்பனை செய்து கொண்டுதான் உற்சாகத்தை வருவித்துக் கொள்ள வேண்டியிருந்தது. கவர்மெண்டு மாளிகையில் பழைய ஆங்கிலேய கவர்னர்தான். மந்திரி சபையும் பழைய மந்திரி சபையேதான். அரசாங்கத்திலாவது ஆட்சி முறையிலாவது வெளிப்படையான மாறுதல் ஒன்றுமில்லை.

ஆனால் கல்கத்தா நகரிலோ அரசாங்கத்தில் இரண்டு வெளிப்படையான மாறுதல்கள் ஏற்படுவதற்கு இருந்தன. வெள்ளைக்கார கவர்னர் போய் இந்தியக் கவர்னர் வருவதாயிருந்தது. ஸுஹ்ராவர்த்தி மந்திரி சபைக்குப் பதில் காங்கிரஸ் மந்திரி சபையின் ஆட்சி தொடங்குவதற்கு இருந்தது.

கவர்னர் பர்ரோஸ் போவது பற்றிக் கல்கத்தா ஹிந்துக்கள் சந்தோஷப்படுவதற்குக் காரணம் இருந்தது. அந்த

...னுவசர் வங்காளத்தின் கவர்னராயிருந்த ...ன்றனை வருஷமும் அனேகமாகக் கவர்ன்மெண்டு மாளிகைக்குள்ளேயே காலம் ...ழித்துவிட்டாராம்! கல்கத்தாவில் மிகப் ...யங்கர சம்பவங்கள் நிகழ்ந்து கொண் ...ருந்தபோதுகூட, பர்ரோஸ் தமது மாளிகையை விட்டு வெளியே வரவில்லையாம்!

அம்மாதிரியே ஸுஹ்ரவர்த்தி மந்திரி சபையின்மேல் கல்கத்தா ஹிந்துக்கள் மோகம் கொள்வதற்கும் காரணம் இருக்கவில்லை. "எப்போ தொலையும்?" என்றுதான் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். கல்கத்தா பயங்கரங்கள், நவகாளி அட்டூழியங்கள் முதலியவற்றுக்குக் கவர்னர் பர்ரோஸ், பிரதம மந்திரி ஸுஹ்ரவர்த்தி இருவருமே பொறுப்பாளிகளாகக் கருதப்பட்டார்கள். இந்தக் குற்றச்சாட்டு எவ்வளவு தூரம் உண்மை என்னும் ஆராய்ச்சியில் நாம் இப்போது இறங்க வேண்டியதில்லை. கல்கத்தாவிலுள்ள 30 லட்சம் ஹிந்துக்களின் மனதில் அப்படியிருந்தது என்பதுதான் முக்கியமானது. அத்தகைய மனநிலை கொண்டவர்களுக்குக் கவர்னரும் மாறி மந்திரி சபையும் மாறியது எவ்வளவோ கொண்டாட்டமாயிருந்திருக்குமல்லவா? இந்தக் கொண்டாட்டத்தோடு சுதந்திரத் திருநாளும் சேர்ந்ததினால் அவர்களுடைய உற்சாகம் கங்காநதியின் பிரவாகத்தைப் போல் வெள்ளமாய்ப் பொங்கிற்று.

மேற்படி கொண்டாட்டத்தையெல்லாம் பார்த்துக்கொண்டு நாங்களும் எல்லையற்ற உற்சாகத்துடனே கவர்ன்மெண்ட் மாளிகையை நோக்கிச் சென்றோம். இந்த ...டுகிலிப் பிரயாணத்தில் எங்கள் காரை ஓட்டியவர் ஸ்ரீ வி. என். ராஜன் ஐ.ஸி.எஸ். அவர்கள். கல்கத்தாவில் நாங்கள் ஸ்ரீ ராஜனுடைய விருந்தாளிகளாக அவருடைய வீட்டிலே தங்கியிருந்தோம். கல்கத்தாவின் அபாயப் பிரதேசங்களுக்கு நாங்கள் போயிருந்ததை அறிந்ததும் ஸ்ரீ ராஜன், "இனிமேல் நான் கார் ஓட்டினால் அன்றி நீங்கள் வெளியே புறப்படக் கூடாது!" என்று உத்தரவு போட்டு விட்டார். "ஏதாவது உங்களுக்கு நேர்ந்து விட்டால் நான் தமிழ் படிக்க ஆரம்பித்திருப்பது என்ன கதியாவது?" என்று ஸ்ரீ ராஜன் கேட்டார்.

ஸ்ரீ வி. என். ராஜன் ஐ. ஸி. எஸ். ...திணேழு வருஷத்துக்கு மேலாக வங்காளத்திலேயே உத்தியோகம் பார்த்து வந்தவர். ஜில்லா மாஜிஸ்ட்ரேட் முதலிய பல பதவிகள் வகித்து, இப்போது கல்வி இலாகா காரியதரிசி உத்தியோகம் பார்க்கிறார். நெடுநாளாக வங்காளத்திலேயே வசித்து வந்தவரானபடியால் தமக்குத் தமிழ் வராது என்று நம்பிக்கை கொண்டிருந்தார். ஒரு வாரத்துக்குமேல் டி. கே. ஸி. அவர்களிடம் பழகி, அவருடைய கவிதைப் பிரசங்கங்களைக் கேட்டு, சின்ன அண்ணாமலையின் 'விகடக்' கச்சேரிகளையும் கேட்ட பிறகு, "தமிழ் நமக்கு வந்துவிடும்; தமிழிலேயே நன்றாய்ப் பேசலாம்; தமிழ்ப் பாடலும் சொல்லலாம்!" என்ற நம்பிக்கை ஸ்ரீ வி. என். ராஜனுக்கு உண்டாகியிருக்கிறது. எப்போது பார்த்தாலும் கையில் 'முத்தொள்ளாயிரம்' என்னும் புத்தகத்துடன் காணப்பட்டு வந்தார். ரஸிகமணியும் தமது பிரசங்கங்களில் அடிக்கடி ஸ்ரீ ராஜனைப் பார்த்து, "மிஸ்டர் ராஜன்! உங்களுக்கு அர்த்தமாகிறது அல்லவா?" என்று கேட்டு வந்தார்.

"நான் தமிழ் படிக்க ஆரம்பித்திருப்பது என்ன கதியாவது?" என்று ஸ்ரீ ராஜன் கேட்டது நேயர்களுக்கு இப்போது அர்த்தமாகிறதல்லவா?

தலையில் காக்கி குல்லா தரித்து ஸ்ரீ வி. என். ராஜன் சர்வ ஜாக்கிரதையுடன் எங்களை கவர்னர் மாளிகைக்கு அழைத்துக் கொண்டு போனார். அபாயம் சிறிதுமில்லாத பந்தோபஸ்தான சாலைகளின் வழியாகவே வண்டியை விட்டுக் கொண்டு போய்க் கவர்னர் மாளிகையின் முன்வாசலை அடைந்தார். ஸ்ரீ ராஜனின் காக்கி குல்லாவைக் கண்டதும் கதவு உடனே திறந்தது. பாஸைக் காட்டிவிட்டு உள்ளே சென்றோம்.

ஆஹா! கவர்ன்மெண்ட் மாளிகை என்ற பெயர் உள்ளதெல்லாம் கவர்ன்மெண்ட் மாளிகை ஆகிவிடுமா? கல்கத்தாவிலுள்ள கவர்ன்மெண்ட் மாளிகையே மாளிகைதான். அது எத்தனை நீளம்? எத்தனை அகலம்? எத்தனை உயரம்? என்ன விஸ்தாரம்! எவ்வளவு அறைகள்? எவ்வளவு விசாலமான ஹால்கள்? எத்தகைய வேலைப்பாடுகள்?

மீரா—பரதநாட்டியம்



1799-ம் ஆண்டிலிருந்து சுமார் நூற்றைம்பது வருஷம் இந்தியாவின் தலைநகராயிருந்த கல்கத்தாவில் எத்தனையோ வைஸ்ராய்கள் வாசம் செய்து, தர்பார் நடத்தி, இந்தியாவை அரசு புரிந்த மாளிகையல்லவா அது? அந்த மாபெரும் மாளிகையில் வாசம் செய்த கவர்னர் ஜெனரல்களின் ஜாப்தாவைக் கேளுங்கள் :—லார்ட் வெல்லெஸ்லி, லார்ட் கார்ன்வாலிஸ், ஸர் ஜார்ஜ் பார்லோ, லார்ட் ஹேஸ்டிங்ஸ், லார்ட் ஆம்ஹெர்ஸ்ட், லார்ட் வில்லியம் பெண்டிங், ஸர் சார்லஸ் மெட்காப், லார்ட் ஆக்லாண்டு, லார்ட் எல்லென்பரோ, லார்ட் லான்ஸ்டோன், லார்ட் எல்ஜின், லார்ட் கர்ஸான், லார்ட் மிண்டோ, லார்ட் ஹார்டிஞ்ச் ஆகிய எத்தனையோ வைஸ்ராய்—கவர்னர் ஜெனரல்கள் அந்த மாளிகையில் வசித்தார்கள். லார்ட் ஹார்டிஞ்சின் காலத்தில் இந்தியாவின் தலைநகரம் புது டில்லிக்குப் போன பிறகு நாளது வரையில் வங்காளத்தில் பிரிட்டிஷ் கவர்னர்கள் அம்மாளிகையில் வசித்தார்கள்.

அப்பேர்ப்பட்ட பிரம்மாண்ட மாளிகைக்குள்ளே நாங்கள் ஆகஸ்டு 14உ நள்ளிரவில் தங்கு தடையின்றிப் பிரவேசித்து, தட்தட் என்று மச்சுப் படிகளில் ஏறிச் சென்றோம். சுவர்களிலே தொங்கிக் கொண்டிருந்த லார்ட் ஹேஸ்டிங்ஸ், கார்ன்வாலிஸ், வெல்லெஸ்லி முதலிய ஏகாதிபத்திய ஸ்தாபகர்கள் எங்களைப் பார்த்துத் திறுதிறுவென்று விழித்தார்கள். ஆள் உயரப் படங்களில் மேற்படி பிரபுக்கள் தத்ரூபமாக உயிருள்ளவர்களைப் போலவே தோன்றினார்கள். அவர்களில் சிலர் கத்தியை உருவும் நிலையில் நின்றார்கள். தொப்பியில்லாமல், பூட்ஸ் இல்லாமல், சட்டையும் அங்க வஸ்திரமும் அணிந்த இந்தக் கறுப்பு மனிதர்கள் இந்த மாளிகைக்குள்ளே எப்படிப் பிரவேசித்தார்கள் என்று மேற்படி ஏகாதிபத்தியப் பிரபுக்களுக்கெல்லாம் ஒரே வியப்பும் திகைப்புமாகவே யிருந்திருக்குமல்லவா? அவர்கள் எங்களைப் பார்த்து விழித்த விழிப்பு சில சமயம் பயங்கரமா யிருந்தது; சில சமயம் பரிதாபமா யிருந்தது. நமது சின்ன அண்ணாமலை லார்டு கார்ன்வாலிஸைப் பார்த்து, "அட சட்! இப்படி அநாகரிகமாய் விழித்துப் பார்க்காதே! முகத்தைத் திருப்பிக்கொள்! இல்லாவிட்டால் கடையைக் கட்டு!" என்றார். கார்ன்வாலிஸ் காதிலே அது விழவில்லை. எப்படி விழும்? அதற்குள்ளே, இன்னும் மிக அதிசயமான காட்சியை யல்லவா லிஸ், கார்ன்வாலிஸ், ஹேஸ்டிங்ஸ் வகையறா பிரபுக்கள் பார்க்க வேண்டியதாயிற்று?

வைஸ்ராய்களும் கவர்னர்களும் வீற்றிருந்த ஸிம்மாசனத்தில் அமருவதற்காகக் கதர் வேஷ்டியும், கதர் ஜிப்பாவும், குறுக்கில் மடித்த கதர் அங்கவஸ்திரமும் தரித்த மெலிந்த மனிதர் ஒருவர் முன்னும் பின்னும் ('எய்ட்டி காம்ப்' என்னும்) கம்பீரத் தோற்றமுள்ள அதிகாரிகள் தொடர வந்து கொண்டிருந்தார். அந்த அதிசயக் காட்சியைச் சுவரில் தொங்கிய பிரிட்டிஷ் பிரபுக்களும், துரைமார்களும் கண் விழிகள் வெளியிலே வந்து விடுமோ என்னும்படியாக விழித்துப் பார்க்கலானார்கள்.

• • •

இதற்குள்ளாக நாங்கள் முக்கிய நிகழ்ச்சி நடக்கப் போகும் ஹாலுக்குப் போய்விட்டோம். மேற்கு வங்காளத்தின் பத்து மந்திரிகள், நீதிபதி மித்தர், கல்கத்தாவின் ஷெரிப், மேயர், பிரபல பத்திரிகைக் காரர்கள் உள்ளிட்ட சுமார் நூறு பேர் வந்திருந்தார்கள். 'டாண்' என்று மணி ஒன்று அடித்ததும் அனைவரும் எழுந்து நின்றார்கள். ராஜாஜி நிதானமாக நடந்து வந்து ஸிம்மாசனத்தின் எதிரில் நின்றார். நீதிபதி மித்தர் அவர் முன்னால் வந்து, "கவர்னர் பதவி வகிக்கத் தங்களுக்குச் சம்மதமா?" என்று கேட்டார். எனக்கும் அண்ணாமலைக்கும் மூச்சு நின்று போய்விட்டது. ராஜாஜி எங்கே "சம்மதமில்லை!" என்று சொல்லி விடுவாரோ என்று பீதி யடைந்தோம். நல்ல வேளையாக "சம்மதம்" என்று ராஜாஜி பதில் சொன்னார். நீதிபதி மித்தர் அரசியல் விசுவாசப் பிரமாணத்தை எடுத்துப் படிக்க, ராஜாஜி பின்னோடு சொல்லிக் கொண்டு வந்தார். கடைசியில் கையெழுத்தும் போட்டார். இது நடந்து வருகையில் நூறு காமிராக்கள் 'கிளிக்' 'கிளிக்' என்று சப்தித்தன. சினிமா காமிராக்கள் சரசரவென்று ஒலித்தன. படம் பிடிப்பதற்கு வேண்டிய பெரிய விளக்குகளை ஏற்றுவதும் அணைப்பதுமா யிருந்தார்கள். ராஜாஜி கையெழுத்துப் போட்டு முடித்ததும் சபையில் ஒரு கணம் நிசப்தம் நிலவியது. "இனிமேல் நாம் மூச்சு விடலாம்!" என்றார் அண்ணாமலை. நான் ஒரு பெரிய பெருமூச்சு விட்டு, "வங்காளம் அதிர்ஷ்டம் செய்ததுதான்!" என்றேன். (தொடரும்)

# குமார விஜயம்

கர்நாடகம்

**ப**குத்தறிவும் இந்தக் காலத்துக் கல்வியறிவும் பெற்றவர்களுக்கு நமது புராண இதிகாசங்களைப் படிக்கும்போதெல்லாம் சிற்சில சந்தேகங்கள் உண்டாகத்தான் செய்யும். "இராவணனுக்குப் பத்துத் தலை இருந்ததா?" என்று கேட்பார்கள். "கும்பகர்ணன் வருஷத்தில் 364 நாள் தூங்கியது உண்மைதானா?" என்பார்கள். "தாடகை மலையைத் தூக்கி எறிந்திருக்க முடியுமா?" என்று சந்தேகப்படுவார்கள். "யமனுக்கு வாகனம் எருமைக் கடா என்பது மெய்யா?" என்று வினவுவார்கள். "சூரபத்மனுக்கு யானை முகத்தோடு ஒரு தம்பியும் சிங்க முகத்தோடு மற்றொரு தம்பியும் இருந்தது உண்மையா? வாலிக்கு அவ்வளவு நீளமான வால் உண்மையில் இருந்ததா? பரமசிவனுடைய குமாரன் சுப்பிரமணியன் குறவர் குலத்துப் பெண்ணை வேடியர் வேடம் பூண்டு கைப் பிடித்தானா? தசரதருக்கு அறுபதினாயிரம் மனைவிகள் மட்டுந்தானா?" என்று இம் மாதிரி எத்தனையோ கேள்விகள் பகுத்தறிவு படைத்தவர்களுக்கு உதயமாகக் கூடியதுதான். இன்னும் பார்க்கப் போனால், பகுத்தறிவுக்காரர்களோடு (நமது ரசிகமணி அடிக்கடி சொல்வதுபோல்) மெட்ராஸ் யுனிவர்ஸிடி பட்டதாரிகளும் கூட அம்மாதிரி கேள்விகளைக் கூசாமல் கேட்பார்கள். கேட்பதோடு இல்லாமல், பதில் வேண்டும் என்பார்கள். சரியான பதில் கிடைக்காவிட்டால், அம்மாதிரி புராண இதிகாசங்களை நெருப்புக்கு இரையாக்கினால் என்ன என்றும் அவர்கள் கேட்கக்கூடும்.

பகுத்தறிவுக்காரர்களின் மேற்படி கேள்விகளுக்குக் குருட்டு நம்பிக்கையுள்ளவர்கள் பதில் சொல்ல ஆரம்பித்துவிட்டால் கேட்க வேண்டியதில்லை. 'இராவணனுக்குப் பத்துத் தலைதான்! தசரதருக்கு அறுபதினாயிரம் மனைவிமார்கள்தான்! இல்லாமல் எப்படியிருக்கும்? வால்மீகி முனிவர் பொய் சொல்லுவாரா?" என்று இவர்கள் வாதமிடுவார்கள். "முருகனுக்கு ஆறு தலைதான்! ஷண்முகம் என்ற பெயரே சாட்சி சொல்லுகிறதே! வேலன் வேடியரும் ஆனார்; வேங்கை மரமும் ஆனார். இல்லாவிடில், கந்த புராணம் பொய்யா?" என்பார்கள்.

இவ்விதம் பகுத்தறிவும் குருட்டு நம்பிக்கையும் செய்யும் யுத்தம் இராமராவண யுத்தத்தையும் சுப்ரமண்யர் — சூரபத்மன் யுத்தத்தையும் ஒத்துப் பிரமாதமாயிருக்கும்.

• • •

**ப**ழைய புராண இதிகாசங்களைக் கொஞ்சம் அந்தரத்தில் நிறுத்தி வைத்துவிட்டு, தற்கால இலக்கியங்களுக்கு வருவோம். புதுமை எழுத்தாளரின் வசன காவியங்களையும், பகுத்தறிவுக்காகப் பிராணனைக் கொடுத்துப் போராடுவோரின் எழுத்தோவியங்களையும், பேனா மன்னர்களின் ஜீவ சக்தி ததும்பும் காரசாரமான கட்டுரைகளையும் கவனிப்போம்.

"வங்காளத்தில் பஞ்சப் பேய் கோர தாண்டவம் ஆடுகிறது!" என்று எழுதுவார்கள். "தோழர் யுகப் புரட்சியார் சிம்ம கர்ஜனை செய்தார்!" என்பார்கள். "அடக்கு முறைப் பூதம் ஆ என்று வாயைத் திறந்து கொண்டு அலைகிறது!" என்பார்கள். "வைதிகக் குடுக்கைகள் தர்ப்பைப் பல்லை உருவிக் கொண்டு போருக்குக் கிளம்பி விட்டன!" என்பார்கள். "மக்களின் நெஞ்சமாகிற எரிமலை நெருப்பைக் கக்கத் தொடங்கிவிட்டது!" என்று எச்சரிப்பார்கள். "தீண்டாமை அரக்கனைக் கொன்று மடித்துக் குழியை வெட்டிப் புதைக்க வேண்டும்!" என்று கர்ஜிப்பார்கள். "மானம் கப்பலேறி விட்டது!" என்றும், "லஞ்சப் பிசாசு தலையை விரித்து ஆடு



றது!" என்றும் எழுதி வெள்ளைக் காகிதத்தில் அச்சுப் போட்டுக் கொடுப்பார்கள்.

"பஞ்சம் என்பது ஒரு பேயா? அது பாத காட்டிய சாஸ்திரத்தைப் படித்துத் தாண்டவ நர்த்தனம் கற்றுக் கொண்டிருக்கிறதா! வஞ்சம் என்பது ஒரு பிசாசா? அதற்குத் தலை உண்டா? தலையில் ரோமம் உண்டா? அது தலையை விரித்துப் போட்டுக் கொண்டு ஆடுமா? அடக்குமுறை என்பது ஒரு பூதமா? அதற்கு வாய் உண்டா? மக்களின் நெஞ்சக்குள்ளே எரிமலை இருப்பது உண்மையா? குடுக்கைகள் யுத்தத்துக்குக் கிளம்புமா? மானம் கப்பலேறினால், அதற்குப் பிரயாண அநுமதிச் சீட்டு வாங்க வேண்டுமா? கப்பலில் எந்த வகுப்பில் அது பிரயாணம் செய்யும்?" என்றெல்லாம் கேட்டோமானால், "ஓகோ! இது என்ன கேள்வி? இப்படியெல்லாம் கன்னாபின்னாவென்று கேள்வி கேட்கலாமா? பேய், பிசாசு, எரிமலை என்று எழுதுவதெல்லாம் விஷயத்தைச் சரியாக விளக்கி மனதில் பதியச் செய்வதற்காகத்தான்!" என்று பதில் சொல்வார்கள்.

"சித்திரா தேவி தன் இளந்தளிர்க் கைகளால் தனது கதாநாயகனை ஆலிங்கனம் செய்து கொண்டாள்!" என்று புதுமை ஆசிரியர் எழுதுவதற்கும் மேற்கண்ட விதமான சமாதானந்தான் சொல்வார்.

இந்தச் சமாதானத்தை ஒப்புக்கொண்ட பிறகு, நாம் மறுபடியும் நமது புராண இதிகாசங்களுக்குக் கொஞ்சம் போக வேண்டும். பத்துத் தலை ராட்சதர்களையும், எருமைக்கடா வாகனத்தையும், சூரபத்மனையும், கஜமுகாசுரனையும், ஆறுமுகக் கடவுளையும், குறவர்குலப் பாவையையும் நமது புராண இதிகாசங்களை எழுதிய பெரியோர்கள் சிருஷ்டி செய்தபோது, இந்தக் காலத்து ஆசிரியர்களைப் போலவே சிற்சில கருத்துக்களை நன்றாக விளக்குவதற்காகச் சிருஷ்டி செய்திருக்கக் கூடாதா என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

அப்படிச் சொந்தமாகச் சிந்தனை செய்ய முடியாதவர்கள் நவாப் ராஜமாணிக்கம் கம்பெனியார் நடத்தும் "குமார விஜயம்" என்னும் அருமையான நாடகத்தைப் பார்க்க வேண்டும். பார்த்தால், நமது புராண இதிகாசக் கதைகளெல்லாம் அப்படியொன்றும் அபத்தமானவை யல்லவென்பதும், அவை அரிய பெரிய கருத்துக்களைக் கொண்ட கற்பனைச் சித்திரங்கள் என்பதும் தெரியவரும். அவை பகுத்தறிவுக்கு விரோதமானவை யல்ல என்றும் பகுத்தறிவைப் பயன்படுத்தி உணரவேண்டியவை என்றும் கூடத் தெரிந்து கொள்ளலாம்.

* * *

நவாப் ராஜமாணிக்கமும் அவருடைய நாடகக் கம்பெனியாரும் தமிழ் நாட்டு நாடகக் கலை வளர்ச்சிக்கு எத்தனையோ சிறந்த தொண்டுகள் செய்திருக்கிறார்கள். "குமார விஜயம்" என்னும் நாடகம் மேற்படி கம்பெனியின் தொண்டுகளுக்கெல்லாம் சிகரம் என்று சொல்லலாம். நவாப் ராஜமாணிக்கம் கம்பெனிக்காக ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமியின் லீலைகளை மேற்படி நாடக ரூபத்தில் அமைத்துக் கொடுத்தவர், பக்தியைப் போலவே பகுத்தறிவிலும் சிறந்த ஒரு பெரியார். திருப்புகழ்மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் மேற்படி திருத் தொண்டைச் செய்து கொடுத்திருக்கிறார். எனவே, முருகப் பெருமானுடைய லீலைகளில் இதற்கு முன் நமக்குப் பொருள் விளங்காத கட்டங்கள் எல்லாம் "குமார விஜயம்" நாடகத்தில் துல்லியமாக விளங்குகின்றன.

நாடகத்தின் ஆரம்பத்தில் சூரபத்மன் தர்பார் நடத்துகிறான். அவன் இரு பக்கத்திலும் சிங்க முகன், கஜமுகன் என்ற தம்பிமார் வீற்றிருக்கிறார்கள். உலகத்துக்குப் பயனுள்ள தொண்டு புரியும் சூரியன், சந்திரன், அக்கினி, வாயு முதலியவர்கள் சூரபத்மனுடைய அடக்குமுறைக்கு உட்பட்டுத் தர்பாருக்குக் கொண்டுவரப் படுகிறார்கள். அவர்களுக்கெல்லாம் சூரபத்மன் தண்டனை விதிக்கிறான். கஜமுகனும் சிங்கமுகனும் மந்திரிகளாயிருந்து சூரபத்மனுடைய ஆங்காரத்துக்கு அடிக்கடி தூபம் போடுகிறார்கள்.

இந்தக் காட்சியும், காட்சியில் வரும் சம்பாஷணைகளும் "சூரபத்மன் எந்தக் காலத்திலோ இருந்து இறந்துபோனவன் அல்ல; இன்றைக்கும் அவன் உயிரோடிருக்கிறான்; ஏகாதிபத்திய தர்பாரை நடத்துகிறான்!" என்று நன்றாக இனம் காட்டி அறிவித்து விடுகின்றன. இந்த ஆரம்பக் காட்சியின் உட்பொருள் விளங்கிய பிறகு, நாடகத்தில் பின்னால் வரும் பல கட்டங்களுக்கும் உண்மைப் பொருளை உணர்ந்து அநுபவிப்பது சுலபமாய்ப் போய்விடுகிறது.

"குமார விஜய"த்தின் காட்சிகளும், கற்பனைகளும், ஜாஜ்வல்ய கட்டங்களும் நவாப் ராஜமாணிக்கத்தின் முத்திரை பெற்று ஒன்றுக்கு மேல் ஒன்று சிறந்து விளங்குகின்றன. சிவபெருமானிடமிருந்து ஐந்து சுடர்களும் பிறகு ஒரு தனிச் சுடரும் வானத்திலிருந்து சரவணப் பொய்கைக்கு இறங்கி வருவதும், ஆறு சுடர்கள் ஆறு குழந்தைகள் ஆவதும், ஆறு குழந்தைகள் ஆறுமுகங்கொண்ட ஒரே குழந்தையாவதும் இந்திரஜாலக் காட்சிகளைப்போல் அமைந்திருக்கின்றன. இன்னும் பல மகேந்திர ஜாலக்காட்சிகள் பின்னால் தொடர்கின்றன.

வள்ளியிடம் முருகன் காதல் கொண்டு கலியாணம் செய்து கொள்ளும் கடைசிக் கட்டம் சிறிதும் விரஸமில்லாமல் உன்னதமாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது.

இந்த நாடகத்தில் வரும் குறவன்—குறத்தி நடனத்தைப் போல், கவலையற்ற வாழ்க்கையின் எக்களிப்பைச் சித்திரிக்கும் இன்னொரு நடனத்தைப் பார்க்க முடியாது. கதகளி, மணிபுரி நடனங்களும், ருஷியா தேசத்துக் கிராமவாசிகளின் நடனமுங்கூட இந்தக் குறவன்—குறத்தி நடனத்தின் முன்னால் கைகட்டி வாய் பொத்தி ஒதுங்கி நிற்கவேண்டியதுதான்.

"குமார விஜய"த்தில் எல்லாப் பாத்திரங்களும் மிக நன்றாக நடித்தாலும், வள்ளியாகிய சிறு கன்னியைப் பற்றி விசேஷமாக ஒரு வார்த்தை சொல்லவேண்டும். ஒரு கண நேரமாவது நின்ற இடத்தில் நில்லாமல் பரபரப்போடும் துடி துடிப்போடும் வள்ளி வேஷம் பூண்ட இளம் பிள்ளை அற்புதமாய் நடிக்கிறான். அரங்கமேடையில் வள்ளி முன்னும் பின்னும் ஓடி ஆடுவது ஆகாச வெளியில் அங்கு மிங்கும் மின்னல் பாய்வதுபோலிருக்கிறது.

"குமார விஜய"த்தைப் பற்றி இன்னும் ஒரு செய்தி மட்டுந்தான் சொல்ல வேண்டும். கல்லிடைக் குறிச்சியில் "குமார விஜயம்" நடந்தபோது ரஸிகமணி அவர்களும் நானும் குற்றாலத்திலிருந்து போய்ப் பார்த்தோம். அடுத்தபடியாக, தூத்துக்குடியில் "குமார விஜயம்" நடந்தபோது இருவரும் இரண்டாவது தடவை போய்ப் பார்த்துக் களித்தோம்.

வருகிற செப்டம்பர் மாத ஆரம்பத்தில் நவாப் ராஜமாணிக்கம் மதுரையில் நாடகம் ஆரம்பிக்கப் போவதாக அறிகிறேன். மதுரையில் "குமார விஜயம்" நடக்கும் போது மூன்றாவது தடவை அங்குபோய்ப் பார்க்க எண்ணியிருக்கிறோம்.

"குமார விஜயம்" நாடகத்தில் சில காட்சிகள் நமது சைத்திரிகர் மணியத்தினால் இந்த இதழ் அட்டைப் படத்தில் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன.

★ ★ ★ ★ ★ ★

# விடுதலையும், மணிக்கொடியும்

ஆகஸ்டு 15உ சுதந்திரத் திருநாளை யொட்டி "ஸரஸ்வதி ஸ்டோர்ஸ்" கம்பெனியார் பாரதியார் கீதங்கள் இரண்டு அடங்கிய இசைத் தட்டை வெளியிட்டிருக்கிறார்கள். ஏற்கெனவே பாரதியார் கீதங்களை இன்னிசையுடன் பாடிப் புகழ்பெற்ற ஸ்ரீமதி D. K. பட்டம்மாள் இந்த இசைத் தட்டிலும் பாடியிருக்கிறார். "விடுதலை! விடுதலை! விடுதலை!" என்று பாரதியார் மும்முறை சொல்லிப் பல்லவியாக அமைத்திருக்கும் அருமையான பாட்டை மோகன ராகத்தில் ஸ்ரீமதி பட்டம்மாள் பாடியிருக்கிறார். பாட்டின் தானமும் நடையும் விறுவிறுப்புடன் படையெழுச்சியின் போது பாடக் கூடிய முறையில் அமைந்திருக்கின்றன. நேதாஜியின் இந்திய சுதந்திரப் படை கையாண்ட 'கதம் கதம் படாயகா' என்னும் பாட்டை 'விடுதலை' மெட்டு நினைவூட்டுகிறது.

மற்றொரு பக்கத்தில் "தாயின் மணிக் கொடி பாரீர்! அதைத் தாழ்ந்து பணிந்து புகழ்ந்திட வாரீர்!" என்று உருக்கமான ஹிந்துஸ்தானி வர்ண மெட்டில் நாம் கேட்டுக் கொள்ளப் படுகிறோம். பாரதியார் கற்பனை செய்த கொடியில் "வந்தே மாதரம்" என்று எழுதித் திகழ்ந்தபடி இப்போது எழுதப்பட்டிரா விட்டாலும், அந்த மந்திரத்தை நாம் மனதிலே வைத்துக் கொண்டு அசோக சக்கரம் திகழும் சுதந்திர மணிக் கொடியைத் தாழ்ந்து பணிந்து புகழ்ந்து வணங்குகிறோம்.

# பாரதி மண்டப நிதி

பாரதி மண்டபத் திறப்பு விழாவை அமோகமாக நடத்துவதென்று திருநெல்வேலி ஜில்லாப் பிரமுகர்கள் தீர்மானித்து அதற்காக ஒரு வரவேற்புக் கமிட்டியையும் நியமித்திருக்கும் விவரத்தை நேயர்கள் தினப்பத்திரிகைகளில் பார்த்திருக்கலாம். வரவேற்புக் கமிட்டியின் தலைவர் எட்டயபுரம் சமஸ்தானத்து மகாராஜா அவர்கள். பாரதி மண்டபம் கட்டுவதற்கு ஆரம்ப பூமிதானம் செய்தது முதல் எல்லாவகை உதவியும் செய்து வந்தவர்கள். இப்போது திறப்பு விழாச் செலவுக்காக ரூபாய் 8,000 நன்கொடை அளித்திருக்கிறார்கள். இன்னும் எவ்வளவோ உதவிகளும் செய்யப் போகிறார்கள்.

உபதலைவர்கள் மூவரும் மூன்று மணியான நபர்கள். மகாராஜாவின் மைத்துனர் ஸ்ரீ அமிருதசாமி எட்டயபுரம் பாரதி இலக்கிய மன்றத்தின் போஷகர். ஸ்ரீ எ. பி. ஸி. வீரபாகு அவர்களைப்பற்றி ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. திருநெல்வேலி ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் தலைவர்; எனவே, திறப்புவிழாவின் பொறுப்பு முழுவதையும் வகிக்கப் போகிறவர். அந்தப் பொறுப்பில் ஒரு முக்கியமான பங்கை இன்னொரு உபதலைவரான கோவில்பட்டி ஸ்ரீ ராமசாமி தாஸ் ஏற்றுக் கொண்டிருக்கிறார். திறப்பு விழாவின் போக்கு வரவு மந்திரியாக ஸ்ரீ ராமசாமி தாஸ் அவர்களை வரவேற்புக் கமிட்டியார் ஏகமனதாக நியமித்திருக்கின்றனர்.

வரவேற்புக் கமிட்டியின் பொக்கிஷதார், எட்டயபுரம் மேயரும் பாரதிமன்றத் தலைவருமான ஸ்ரீ கந்தசாமி செட்டியார் அவர்கள். எனவே, பணச்செலவு சரியான முறையில் நடக்கிறதா என்பது பற்றி நமக்குக் கவலையில்லை; செட்டியார் அவர்களே கவலைப்பட்டுக் கொள்வார்.

பொதுக் காரியதரிசி ஸ்ரீ என். சோமயாஜுலு, கமிட்டி ஸ்தாபிக்கப்பட்ட அன்றிரவே வேலை தொடங்கி விட்டார். பந்தல் கமிட்டி, உணவுக் கமிட்டி, ஜாகைக் கமிட்டி, பத்திரிகைக்காரர்களைக் கவனித்துக் கொள்வதற்கென்று ஒரு தனிக் கமிட்டி ஆகியவை ஏற்படுத்தி யாகிவிட்டது. ஸ்ரீ என். சோமயாஜுலுவின் காரிய நிர்வாகத் திறமையைப் பற்றி ஏற்கனவே நாம் நன்கு தெரிந்து கொண்டிருப்பதால், திறப்பு விழா ஏற்பாடுகளில் ஒரு குறையும் இராதென்று எதிர்பார்க்கலாம்.

வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர் சுமார் 50 பேர் சேர்ந்திருக்கிறார்கள். இன்னும் சிலர் சேரலாம் என்று எதிர்பார்க்கப் படுகிறது. கமிட்டி பூரணமாக அமைந்த பிறகு எல்லாப் பெயர்களையும் சேர்த்தாற் போல் வெளியிடலாமல்லவா?

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ கா. த. ஷண்முகசுந்தர முதலியாருக்காக ஸ்ரீ எ. பார்த்தசாரதி முதலியார், மயிலாப்பூர் | 250 | 0 | 0 |
| டாக்டர் வி. ராம ராவ், பூனமல்லி ரோடு, சென்னை | 101 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். ஆர். ஸ்வாமி, மணீந்தர மில்ஸ் லிமிடெட், காசிம் பஜார், மூர்ஷிதாபாத் | 101 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். எம். சல்லரமூர்த்தி செட்டியார், கொழும்பு | 101 | 0 | 0 |
| இந்திய விமானப் படை நண்பர்கள், பங்களூர். (ஸ்ரீ எ. வேங்கடேசன் மூலம்) | 37 | 0 | 0 |
| ஆக்ஸ் போர்ட் யூனிவர்ஸிடி பிரஸ் உறுப்பினர்கள், சென்னை (ஸ்ரீ நா. பத்மநாபன் மூலம்) | 30 | 0 | 0 |
| ஸ்ரீ தி. சொர்ணாம்பிகை, கோலாலம்பூர் | 26 | 8 | 0 |
| ஸ்ரீ வி. தி. ராமசாமி செட்டியார், ஸ்ரீ வி. தி. முத்து பழநியப்ப செட்டியார், கம்பளை | 26 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். பார்த்தசாரதி, அகில இந்திய ரேடியோ, திருச்சி | 25 | 0 | 0 |
| கானரத்னம் வி. வி. சடகோபன், சங்கீத வித்வான், சென்னை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ என். சுப்பய்யா, ஆச்சம்பட்டி, மதுரை | 15 | 0 | 0 |
| ஸ்ரீ ச. மு. பிள்ளை, எம். ஏ. தமிழர் சங்கம், மைடன்ஹாம், டர்பன், தென்னாப்பிரிக்கா | 13 | 4 | 0 |
| எம். எஸ். எம். ரயில்வே, எம். எ. அண்டு ஸி. எ. டு. ஆபீஸ், 'ஈ' செக்ஷன் உத்யோகஸ்தர்கள், சென்னை (ஸ்ரீ கே. ஆர். தண்டபாணி அவர்கள் மூலம்) | 11 | 9 | 0 |
| இந்திர விலாஸ் ஹோட்டல் தொழிலாளர்கள், மதுரை | 11 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். ராமையாவும் நண்பர்களும், ராசிபுரம் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ அ. பொன்னுசாமி, ராஜாஜி வாலிபர் சங்கம், கரூர் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ கே. பி. முருகப்ப செட்டியார், கன்னராவி | 10 | 0 | 0 |
| டாக்டர் கே. எஸ். சீதாராமன், மெடிகல் ஆபீஸர், சந்திரநாகூர் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ கே. எஸ். நாச்சிமுத்து, மஜூர், பழநி | 10 | 0 | 0 |
| ஸ்ரீ ஆரு. சுப. சுப்பிரமணியஞ் செட்டியார், மேலைச்சிவபுரி, புதுக்கோட்டை | 7 | 0 | 0 |
| ஸ்ரீ லெ. பழ. லெட்சுமணன் செட்டியார், மேலைச்சிவபுரி, புதுக்கோட்டை | 7 | 0 | 0 |

| | | | |
|---|---|---|---|
| ஜெனா. மரகதாம்பாள், சித்தூர், கொச்சின் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ராமசாமி செட்டியார், நாதலைசரின்னியபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ச. செ. சுப்பிரமணியன் செட்டியார், தேவகோட்டை | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். பஞ்சாபகேசய்யர், விளாங்குடி | 5 | 0 | 0 |
| பாரதி நிலையம், ஆர். எஸ். புரம், கோயமுத்தூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ அ. அம்பலத்தரசு, இராமநாதபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. அனந்தராஜு, நேதாஜி சங்கம், கொளந்தூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீமதி ராஜாமணி அம்மாள், உதகமண்டலம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ஏ. ராஜாமுகம்மது, நேதாஜி மார்க் சியக்காய்த்தூள் தம்நாடு தொழிற்சாலை, வலங்கைமான் | 5 | 0 | 0 |
| ஐந்து ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடைகள் | 5 | 0 | 0 |
| (எழுத்தாளர் மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ பெ. தூரன் மூலம் ரூ. 120-க்கு விவரம்) | | | |
| ஸ்ரீ இ. சுப்பிரமணியம், அட்வகேட், கோவை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ குட்டப்பாளையம் பெரியசாமி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ஆர். சன்வரமூர்த்திக் கவுண்டர், திருப்பூர் | 25 | 0 | 0 |
| ஜயபாரதமணி, கோயமுத்தூர் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ த. ராமகிருஷ்ண நாயுடு, அத்திப்பாளையம் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ டி. எஸ். கலியாணசுந்தரம் செட்டியார், கோவை | 10 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். முருகய்ய கவுடர் அண்டு சன்ஸ், கோவை | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எம். நல்லசாமிக் கவுண்டர், வேளாள பிரஸ், கோவை | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ரு. வெங்கடாசலம், வித்யாலயம், கோவை | 5 | 0 | 0 |
| (எட்டயபுரம் பாரதி இலக்கிய மன்ற போஷகர் ஸ்ரீ ஆர். அமிர்தசாமி அவர்கள் மூலம் வரவு ரூ. 822க்கு விபரம்) | | | |
| நடுவிற்பட்டி செங்குந்த முதலியார் மூன்று தெருவின் சர்பாக அம்பலம் ஸ்ரீ மு. அ. வே. அய்யம்பெருமாள் முதலியார் அவர்கள் மூலம் வருவான தொகை | 501 | 0 | 0 |
| நடுத்தெரு, மகாராஜபுரம் செங்குந்த முதலியார் சர்பாக அம்பலம் ஸ்ரீ ச. ராமசாமி முதலியார் அவர்கள் மூலம் வரவு | 101 | 0 | 0 |
| நடுவிற்பட்டி அம்மன் கோவில் தெரு, வகையறா அம்பலம் ஸ்ரீ அ. கு. மா. அனந்தப்ப முதலியார் அவர்கள் மூலம் வரவு | 75 | 0 | 0 |
| ஸ்ரீ சோ. ராமசாமி மணியம், ஜவுளி வியாபாரம், நடுவிற்பட்டி | 51 | 0 | 0 |
| ஸ்ரீ சோ. சேந்திய முதலியார், நூல் வியாபாரம், நடுவிற்பட்டி | 25 | 0 | 0 |
| அய்யனூர் அண்டு பிரதர், நூல் வியாபாரம், நடுவிற்பட்டி | 21 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. ஜே. ஜோசப் சப்பன், ரெயில்வே டிபார்ட்மெண்ட் சூப்பர்வைசர், எட்டயபுரம் | 15 | 0 | 0 |
| ஸ்ரீ தெ. சுப்பையத் தேவர், பருத்தி வியாபாரம், நடுவிற்பட்டி | 11 | 0 | 0 |
| ஸ்ரீ கரு. சாமி. திருப்பதி நாடார், கமிஷன் ஏஜெண்ட், எட்டயபுரம் | 11 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். நாகேஸ்வரன், சப்-எடிட்டர், ராய்டர்ஸ், சென்னை | 11 | 0 | 0 |
| (அருப்புக்கோட்டை ஸ்ரீ ராயர் மூலம் வரவு ரூ. 201-க்கு விவரம்) | | | |
| பஞ்சாயத்து போர்டு சிப்பந்திகள் | 31 | 0 | 0 |
| ஸ்ரீ வி. டி. வாழவந்த பிள்ளை, சந்திரா காபி ஒர்க்ஸ், அருப்புக்கோட்டை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. வி. எஸ். ராமசாமி பண்டாரம், ஷராப் மெர்ச்சண்ட் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். வி. கல்யாணசுந்தரம் செட்டியார், பொக்கிஷதார், நகர காங்கிரஸ் கமிட்டி | 25 | 0 | 0 |
| ஸ்ரீ பி. சோ. மீனாட்சி செட்டியார் தலைவர், அர்பன் பாங்க் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ எச். சங்கரய்யர், அமிர்தலிங்க விலாஸ் ஹோட்டல் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். வி. எஸ். சோமசுந்தரம், தலைவர், தாலுகா கைத்தறி நெசவாளர் சங்கம், அருப்புக்கோட்டை | 10 | 0 | 0 |
| ஸ்ரீ ஆ. மு. செந்தூரான், அருப்புக்கோட்டை | 10 | 0 | 0 |
| வெள்ளைக்கோட்டை கூட்டுறவு சொஸைட்டி டைரெக்டர்கள் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ பு. சு. சோ. சுப்ரமணியம், சாயத் தொழிற்சாலை | 5 | 0 | 0 |
| ஸ்ரீ சா. வு. குருசாமி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பெ. ரா. ம. நடராஜன் | 5 | 0 | 0 |
| சாது ஸ்ரீ ம. சி. மு. கிருஷ்ணசாமி நாயகர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பரமேஸ்வரி சகாய நிதி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எம். சுந்தரராஜ் | 5 | 0 | 0 |
| (கொழும்பு ஸ்ரீ ச. க. ஆதிநாராயணன் செட்டியார் மூலம் வரவு ரூ. 221-க்கு விபரம்): | | | |
| ஸ்ரீ ச.க. ஆதிநாராயணன் செட்டியார் | 11 | 0 | 0 |
| ஸ்ரீ மு. மா. சதாசிவம் பிள்ளை | 11 | 0 | 0 |
| ஸ்ரீ தி. சோ. கணபதி | 11 | 0 | 0 |
| ஸ்ரீ க. வெள்ளையன் செட்டியார் | 11 | 0 | 0 |
| ஸ்ரீ மு. பாலசுந்தரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ தி. சோ. கிருஷ்ணன் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ சி. த. சிதம்பரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வெ. செல்லையா | 5 | 0 | 0 |
| ஸ்ரீ மா. முத்துசாமி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பூ. வீரமணி செட்டியார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. பாபநாசம் செட்டியார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. எம். முத்துகிருஷ்ணன் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வை. பெருமாள் செட்டியார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பெ. ராமசாமி நாடார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ சொ. சீதாராமன் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ அ. கு. பெ. நாகலிங்கம் செட்டியார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ரெகுகன் செட்டியார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ செ. ராமநாதன் செட்டியார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ தி. அனந்தபெருமாள் செட்டியார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ க. வெ. சோமசுந்தரம் செட்டியார் அண்டு பிரதர்ஸ் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். எஸ். டி. ஆறுமுகம் செட்டியார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். எம். திருவடி செட்டியார் அண்டு கோ | 5 | 0 | 0 |
| ஸ்ரீ க. ப. சுப்பையா செட்டியார் அண்டு கோ | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வெ. க. பார்வதிநாதன் செட்டியார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பூ. சங்கர அப்பு செட்டியார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. பி. கே. சுடலையாண்டி செட்டியார் அண்டு பிரதர்ஸ் | 5 | 0 | 0 |

# ஆகஸ்டுமீ 15உ

சுதந்திரம் அடைந்து விட்ட ஆனந்தத்தினால் கல்கத்தா நகர வாசிகளுக்குத் தரையிலே நிற்க முடியவில்லை. டிராம்கியின் தலை மேலும் மோட்டார்களின் உச்சியிலும் ஏறி நிற்கிறார்கள்.

சுதந்திரத் திருநாளன்று காலையில் வங்காளச் சட்ட சபையில் ராஜாஜி பேசிக்கொண் டிருந்தபோது, அங்கேயும் ஜனங்கள் திமுதிமு வென்று பிரவேசித்து விட்டார்கள்.



சட்ட சபை மண்டபவாசலிலும் ஏகக் கூட்டந்தான்!

அன்று பகலெல்லாம் கல்கத்தா வீதிகளில் எங்கே பார்த்தாலும்
போக்கு வரவு தடைப்பட்டுத் தேங்கி நின்றது.

ஆனால் கவர்ன்மெண்ட் மாளிகைக்குள்ளே மட்டும் ஜனங்கள் தங்கு
தடையின்றிப் போய்க்கொண்டும் திரும்பிக்கொண்டும் இருந்தார்கள்.

கல்கத்தாவிலுள்ள தென்னிந்தியர்கள் சுதந்திரத் திருநாளை ஆனந்தமாய்க் கொண்டாடி
னார்கள். குழந்தைகளின் மாறு வேடப் போட்டியில் பரிசுத் தீர்ப்பு அளிக்கப்படுகிறது

ஆனந்தச் சுதந்திரம் பெற்ற பாரதத் தாய் அரங்கமேடையில் காட்சி தருகிறாள்!

# பழமையும் புதுமையும்



நம் முன்னோர்கள் தங்களுடைய பற்களை ஆலம்விழுது, வேப்பங்குச்சி முதலியவைகளால் சுத்தம் செய்துகொண்டிருந்தார்கள்.

தற்காலத்தில் நாம் ரஸாயனசாஸ்திரத்தின் உதவியால் கோலினாஸ் பல்பொடைக் கொண்டு பற்களை சுத்தசெய்து சுத்தமாகவும் கெட்டியாகவும் வைத்துக்கொள்ள முடிகிறது. என்றென்றும் கோலினாஸ் நுரை பல் இடுக்குகளில் சென்று பரிஷ்காரப்படுத்தி, ருசி, வாய் சுத்தம், யாவற்றையும் இனிமையாக்குகிறது.

# KOLYNOS

கோலினாஸ்
சிக்கனமானது
½ அங்குல பேஸ்ட்
தான் தேவையானது




K1.2 TAM.

போட்டிக் கதை—9

# பாம்பும் குழவியும்




கிருஷ்ணசாமி

ஜெயராமனுக்கும் கிருஷ்ணமூர்த்திக்கும் இடையேயிருந்த நட்புக்கு உவமை அவர்களுடைய நட்பேதான். அதை வர்ணிக்க இயலாது. இருவரும் சுய அறிவு படைத்த நாளிலிருந்து ஒன்றாகப் பழகி வந்தவர்கள். உயிர் ஒன்று, உடல் இரண்டு என்பது உண்மையில் அவர்களுக்குத்தான் பொருந்தும். தன்னைவிட மூர்த்தியிடம் தன் கணவனுக்கு அன்பு அதிகம் என்று ராஜம் அவன்மீது பொறாமை கொண்டிருந்தாள்; அதேமாதிரி மூர்த்தியின் மனைவி கமலா, ஜெயராமன்மீது பொறாமை கொண்டிருந்தாள்.

ஆறு வருஷ காலமாகப் பிரிந்திருந்த நண்பர்கள் அன்றுதான் கூடினர். மேற்படிப்புக்காக இங்கிலாந்து சென்றிருந்த கிருஷ்ணமூர்த்தி, ஆறு வருஷங்கள் கழித்து அன்றுதான் சென்னை வந்து சேர்ந்தான். அவனை வரவேற்க அவன் பெற்றோர், கமலா யாவரும் வந்திருந்தனர். அவர்கள் அனைவரும் ஜெயராமன் வீட்டில்தான் தங்கியிருந்தனர். ஜெயராமனுக்கு நிலைகொள்ளாத ஆனந்தம். மிகவும் பலமான விருந்து நடந்தது. யாவரும் சாப்பிட்டு விட்டுக் களைப்பாறிக் கொண்டிருந்தனர். உல்லாசப் பேச்சுகள் நடந்து கொண்டிருந்தன.

“என்னடா, மூர்த்தி! ஆறு வருஷங்கள் ஐரோப்பாவில் இருந்ததற்கு உன்னிடம் ஒரு மாறுதலும் காணவில்லையே!” என்று ஆரம்பித்தான் ஜெயராமன்.

“அதுவா, என் அம்மாவுக்குக் கொடுத்துவிட்டுப் போன வாக்குறுதியைக் காப்பாற்ற வேண்டாமா? மேலும் ஆறு மாதம், ஒரு வருஷம் என்று இருந்திருந்தால் அந்த மாறுதல்களெல்லாம் ஏற்பட்டிருக்கும். அதிக நாட்கள் இருந்து விட்டேனோ, இல்லையோ! வந்த மாறுதல்களெல்லாம் திரும்பிப் பழையனவாய் விட்டன!” என்று பதிலளித்தான் கிருஷ்ணமூர்த்தி.

“இதோ பார், இந்தக் கூடம் பூராவும் நீ எழுதி அனுப்பிய படங்கள்தான்!” என்றான் ஜெயராமன்.

கிருஷ்ணமூர்த்தி ஒருமுறை கூடத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டுச் சந்தோஷமடைந்தான். அவன் சித்திரம் வரைவதில் மிகுந்த தேர்ச்சி அடைந்தவன். ஐரோப்பாவிலிருந்து அநேக சித்திரங்கள் எழுதி அவன் ஜெயராமனுக்கு அனுப்பியிருந்தான்.

"அதிருக்கட்டும்; ஆறு வருஷங்களுக்கு மேலாய் விட்டனவே! கொஞ்சம் உன் புல்லாங்குழலை எடுத்து வாசியேன், கேட்கலாம்" என்றான் மூர்த்தி.

ஜெயராமன் திடுக்கிட்டு விட்டான். அவன் முகம் வாடிவிட்டது. அவன் கண்கள் எங்கோ பார்த்த வண்ணமாயிருந்தன. அவன் எதையோ நினைத்து வருந்துபவன்போலாகி விட்டான். ராஜமுங்கூட மிகுந்த கலவரம் அடைந்தாள். மூர்த்திக்கு விஷயம் ஒன்றும் புரியவில்லை. ஜெயராமன் மிகவும் நேர்த்தியாகப் புல்லாங்குழல் வாசித்து வந்தது அவனுக்குத் தெரியும். தனக்கு அதைக் கேட்பதிலிருக்கும் பிரியமும் ஜெயராமனுக்குத் தெரியும். அப்படியிருக்க தான் கேட்டு அவன் மனவருத்தம் அடையக் காரணம் என்னவென்று அவனுக்கு விளங்கவில்லை. ஆகவே, அவன் ராஜத்தை நோக்கி, "மன்னி, நீங்கள் தான் சொல்லுங்களேன்! குழல் வாசிப்பதற்கு ஏன் இவர் இவ்வளவு கலக்கம் அடைகிறார்? இது ஒன்றும் பெரிய சபையில்லையே! என்ன காரணம், அவருடைய முகம் இப்படி வாடி விட்டதற்கு?" என்று கேட்டான்.

ராஜமும் பெருமூச்செறிந்தாள். "அது பெரிய கதை. சந்தோஷமாகப் பொழுது கழித்து கொண்டிருக்கையில் அந்தப் பாழும் நினைவு ஏன் வந்ததோ! என்ன, சொல்லட்டுமா, கதை முழுவதும்?" என்று அவள் தன் புருஷனை நோக்கியவாறு கேட்டாள்.

"போது; நானே சொல்கிறேன். கிருஷ்ணமூர்த்தி! கேள். இதைக் கேட்டுவிட்டு நீ ஒரு கதையாகக்கூட எழுதலாம். ஆனால், அதைப் படிப்பவர் யாரும் கதை என்று எண்ணுவார்களே தவிர, உண்மைச் சம்பவம் என்று ஒருநாளும் நம்ப மாட்டார்கள்!" என்று ஜெயராமன் ஆரம்பித்தான்.

அவன் சொன்ன கதைதான் இது:—

'எஞ்சினீர்' பட்டம் பெற்ற ஜெயராமன் கட்டிடம் கட்டும் பெரிய கம்பெனியொன்றில் எஞ்சினீராக வேலை பெற்றுக் கொண்டான். அந்தக் கம்பெனியார் சென்னை மாகாணம் முழுவதும் அநேக இடங்களில் விமான நிலையங்கள் அமைக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தனர். ஜெயராமன் சிறிது சிறிதாக வேலை பயின்று வந்து, கடைசியில் விமான நிலையங்கள் அமைப்பதில் சிறந்து விளங்கினான்.

ஜெயராமனுக்குச் சங்கீதம் என்றால் பெரிய பைத்தியம். நல்ல ஞானமும் உண்டு. காலேஜிலிருந்த நாள் முதற்கொண்டே தானும் புல்லாங்குழல் வாசிக்கக் கற்றுக் கொண்டான். நாளடைவில் நல்ல தேர்ச்சியும் அடைந்தான். வேலையின்றி இருக்கும் நேரங்களிலெல்லாம் குழல் வாசிப்பதுதான் அவனுக்குப் பொழுதுபோக்கு.

அப்போது உள்நாட்டில் பெரிய காடு ஒன்றை அழித்து மிகப் பெரியதொரு விமான நிலையம் கட்டுவதில் ஈடுபட்டிருந்தான் ஜெயராமன். காடோ மிகவும் பயங்கரமான காடு. விஷஜந்துக்களும், கொடிய விலங்குகளும் அங்கே விசேஷமாக உண்டு. ஜெயராமன் அவற்றைப் பொருட்படுத்தாமல் தன் வேலையைச் செய்து வந்தான். காட்டுக்கு நடுவே தனக்கு வாசஸ்தலம் அமைத்துக் கொண்டான். ராஜமும் மூன்று வயது நிரம்பிய குழந்தை சந்திரனும் அவனுடன் இருந்தார்கள். வீட்டில் வேலையாட்களும், இதர சௌகரியங்களும் உண்டு. இராணுவ வேலையானதால் அந்த நடுக் காட்டிலிருக்கும் அவன் வீட்டில் டெலிபோனும் இருந்தது.

சாயந்திரம் வேலை முடிந்து ஜெயராமன் வீடு வந்ததும் சிற்றுண்டி சாப்பிட்ட பிறகு தன் குழலை எடுத்து ஆனந்தமாக வாசிப்பான். அவ்வாறு வாசிக்கும்போது அவன் தன்னையே மறந்து விடுவான். ராஜமும் தன்னை மறந்து அந்தக் குழலோசையைக் கேட்டு இன்புறுவாள். தன் கணவனின் மேதையைக் கண்டு பெருமையடைவாள். குழந்தை சந்திரனும் குழலின் நாதத்தில் ஈடுபட்டிருப்பான். இவ்விதமே நாட்கள் கழிந்து வந்தன.

ஒரு நாள் காலை ஜெயராமன் வேலைக்குக் கிளம்பிக் கொண்டிருந்தபோது, வேலையாட்கள் சிலர் கும்பலாகக் கூடி அவனுடன் ஏதோ பேசுவதற்காகக் காத்துக் கொண்டிருந்தனர். ஜெயராமன் அவர்களை நோக்கி விஷயம் என்னவென்று விசாரித்தான்.

"எஜமான், நேற்று மாலை உங்களைக் காண வந்திருந்தோம். உங்கள் வீட்டிற்குள்ளிருந்து குழலோசை வெளியே கேட்

டுக் கொண்டிருந்தது. அப்போது வீட்டு வாசற்படியில் நாங்கள் ஓர் அதிசயத்தைக் கண்டோம். பெரிய நாகம் ஒன்று படமெடுத்துக் குழலோசைக் கிசைந்தாற் போல் ஆடிக் கொண்டிருந்தது. நாங்கள் சற்றுத் தொலைவி லிருந்து அந்தக் காட்சியைப் பார்த்து விட்டுச் சென்றோம். நாகப் பாம்பானதால் நாங்கள் அதை அடித்துக் கொல்லவில்லை. 'இந்த விளையாட்டு வேண்டாம், சாமி! நாகத்தினிடம் விளையாட வேண்டாம்! இந்தக் காட்டை விட்டுப் போகும் வரை நீங்கள் இருட்டு வேளைகளில் புல்லாங்குழல் வாசிக்க வேண்டாம், சாமி!'' என்று அவர்கள் ஜெயராமனைக் கேட்டுக் கொண்டார்கள்.

இதைக் கேட்டு ஜெயராமன் மிகவும் ஆச்சரியம் அடைந்தான். இப்படி எத்தனை நாட்களாக நடக்கிறதென்று அவனுக்குத் தெரியாது. வேலையாட்கள் கூறியதின் பேரில் உண்மையை நேரில் கண்டறிய வேண்டுமென்று அவன் நிச்சயித்தான். அன்று மாலை வீடு வந்து சேர்ந்ததும் வழக்கம்போல் குழல் வாசிக்க ஆரம்பித்தான். ஆனால், அன்று மட்டும் வீட்டிற்கு வெளியில் இருந்துகொண்டு வாசித்தான். சிறிது நேரத்துக்குள் நல்ல பாம்பு ஒன்று தன் வீட்டை நோக்கி வருவதை அவன் கண்டான். தன்னிடம் வேலையாட்கள் விஷயத்தைக் கூறியபொழுது அவனுக்கு வேடிக்கையாகவும், ஆச்சரியமாகவும் இருந்தது. ஆனால் இப்போது நாகத்தை நேரில் கண்டதும் உண்மையிலேயே அவனுக்குச் சற்றுத் திகிலுண்டாயிற்று. பயத்தாலும் ஆச்சரியத்தாலும் குழல் வாசிப்பதைச் சற்றே நிறுத்தினான். குழலோசை நின்றவுடன் பாம்பு தான் வந்த வழியை நோக்கித் திரும்ப ஆரம்பித்தது. அதற்குள் ஜெயராமன் ஒருவாறு தன்னைத் தைரியப்படுத்திக்கொண்டு மறுபடியும் வாசிக்கத் தொடங்கினான். மறுபடியும் பாம்பு அவன் வீட்டை நோக்கி வந்தது.

இந்தச் சந்தர்ப்பத்தில் தற்செயலாக ராஜும் வெளியில் வந்ததை அவன் கவனிக்கவில்லை. தன் வீட்டுக்கு எதிரில் பெரிய



தொரு நாகம் இருப்பதைக் கண்ட அவள் திடுக்கிட்டு, "ஐயோ, பாம்பு! நாகப் பாம்பு!" என்று கூச்சலிட்டு விட்டாள்.

இந்தக் கூச்சலைக் கேட்டு ஜெயராமன் குழல் வாசிப்பதை நிறுத்திவிட்டு, அவளிடம் ஓடி வந்தான். கூச்சலினாலும் ஜெயராமன் எழுந்து வந்த வேகத்தால் உண்டான அதிர்ச்சியினாலும் நாகம் பயந்து போய் வெகு விரைவில் அங்கிருந்து நழுவி மறைந்து விட்டது.

ஜெயராமன் ராஜத்தினிடம் எல்லா விஷயத்தையும் சொன்னான். அவன் என்ன சொல்லியும் அவளுடைய பயம் தெளியவில்லை.

"போயும் போயும் நல்ல பாம்பினிடமா விளையாட்டு? அது வரும் என்று தெரிந்துமா வாசித்தீர்கள்? எனக்கென்னமோ ரொம்ப பயமாய்த்தான் இருக்கிறது. இந்த இடத்திற்கு வந்த நாளிலிருந்தே ஒன்றும் வராமல் ஊர் போய்ச் சேர வேண்டுமே என்று நான் பயந்து கிடக்கிறேன். உங்களுக்கோ எல்லாம் விளையாட்டாக இருக்கிறது!" என்றாள் ராஜம்.

"அடி, பைத்தியமே! நல்லபாம்பினிடம் ஒரு நல்ல குணம் இருக்கிறதே, அது உனக்குத் தெரியாதா? குழலோசை கேட்டு ஆடும்பொழுது ஒரு குழந்தைகூட அதைப் பிடித்து விடலாம். இசையில் லயித்திருக்கும்பொழுது அதற்குக் கண் தெரியாதாம். இன்னும் ஒன்று சொல்கிறேன், கேள்! காட்டில் உள்ள மிருகங்களும், விஷ ஜந்துக்களும் தங்களுக்குப் பசி ஏற்பட்டாலோ, அல்லது ஏதாவது துன்பம் ஏற்பட்டாலோதான் மற்றப் பிராணிகளைக் கொல்லும். காரணமில்லாமல் அடித்துக் கொண்டு சாவதெல்லாம் நம் மனித வர்க்கத்திலேதான்! நமக்குப் பாம்பினிடமிருக்கும் பயம் அதற்கும் நம்மிடம் இருக்கிறது. நாம் அதை இம்சை செய்யப் போனால்தான், தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு அது நம்மைக் கடிக்க வருகிறது. நீ ஏன் இப்படிப் பயப்படுகிறாய்? அப்படி ஏதாவது பாம்பு விஷமம் பண்ண வந்தால், அதன் மண்டைமேல் ஒரே அடி! அவ்வளவு தானே?" என்று அவளுக்குத் தைரிய மூட்டினான் ஜெயராமன்.

அன்று முதல் ஜெயராமன் குழல் வாசிப்பதும், பாம்பு அவன் வீட்டுக்கு எதிரே வந்து படம் எடுத்து ஆடுவதும் சர்வ சாதாரணமாகி விட்டன. முதலில் அந்தக் காட்சியை அதிசயத்துடன் கண்ட வேலையாட்கள், நாளடைவில் அதைப் பற்றிக் கவனமே செலுத்தவில்லை. ஆனால் இருட்டு வேளைகளில் மட்டும் அவர்கள் ஜெயராமன் வீட்டுப் பக்கம் போகாமல் மிகவும் ஜாக்கிரதையாக இருந்தனர். ராஜம்கூடத் தன் பயத்தைச் சிறிது மறந்திருந்தாள். ஜெயராமனுக்கு வரவர அந்தப் பாம்பினிடத்தில் ஒருவித இரக்கமும் அனுதாபமும் தோன்றின. ஏன், அன்பும் தோன்றிற்று என்றுகூடச் சொல்லலாம். தினம் தான் குழல் வாசிக்க ஆரம்பிக்கு முன், ஒரு சிறு தட்டில் கொஞ்சம் பால் ஊற்றி வீட்டிற்கு வெளியில் வைப்பான். பாம்பும் அதைக் குடித்து விட்டுப் போகும்.

ஒரு நாள் ஜெயராமனுக்கு அவன் மாமனாரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. ராஜத்தின் தங்கை லக்ஷ்மிக்குக் கல்யாணம் என்றும், அதற்கு அவர்கள் அவசியம் வர வேண்டுமென்றும் அதில் கண்டிருந்தது. ஜெயராமன் போக இயலாததால் ராஜம் மட்டும் போனாள். தனக்குப் பொழுது போக்காக இருக்கும்பொருட்டுக் குழந்தை சந்திரனைத் தன்னுடன் வைத்துக் கொண்டான் ஜெயராமன். தான் ஒரு வாரத்திற்குள் திரும்பி வந்துவிடப் போவதால், குழந்தையை ஜெயராமனிடம் விட்டுப் போக ராஜமும் இசைந்தாள்.



அன்று சாயந்திரம் ஜெயராமன் வழக்கம்போல் வீட்டிற்குள்ளிருந்தபடி குழல் வாசித்துக்

கொண்டிருந்தான். தன் குழலின் நாதத்தில் வெகுவாக மூழ்கி யிருந்த அவன் திடீரென்று அபஸ்வரத்தில் "அம்மா!" என்ற அலறலைக் கேட்டுத் திடுக்கிட்டான். குழலைக் கீழே வைத்து விட்டு எழுந்தான். வீட்டில் விளையாடிக் கொண்டிருந்த சந்திரனைக் காணவில்லை. ஓடோடியும் வெளியே வந்தான். அங்கு கண்ட காட்சி அவன் உயிரையே மாய்த்து விடும்போலிருந்தது. வீட்டு வாசற் படியில் நாகத்தால் தீண்டப்பட்டுக் குழந்தை சந்திரன் கீழே விழுந்திருந்தான்.

சந்திரனின் உடம்பில் விஷமேறி இருந்தது. உயிர் மெல்லியதாக ஆடிக் கொண்டிருந்தது. ஜெயராமன் குழந்தையைக் கையில் தூக்கிக் கொண்டு வீட்டிற்குள் ஓடினான். தன் மாமனுடன் டெலிபோனில் பேசினான்.

"மாமா, என் அசட்டுத் தனத்தினால் காரியம் மிஞ்சிவிட்டது. குழந்தையைக் கருநாகம் தீண்டிவிட்டது, மாமா! உடனே நீங்கள் தந்தி யடிக்க வேண்டும். யாரோ ஸ்டேஷன் மாஸ்டர் மந்திரிக்கிறாராமே, அவருக்குக் குழந்தையின் பேர், நக்ஷத்திர மெல்லாம் சொல்லி யடிக்கணும். தந்தி கொடுத்த பிறகு எனக்கு டெலிபோனிலே சொல்லுங்கோ!" என்று பதறினான்.

துக்கத்தினாலும் அழுகையினாலும் அவனால் சரியாகப் பேச இயலவில்லை. குழந்தையை மடியின்மீது வைத்துக்கொண்டு 'கோ' வென்று அழுதான். அவ்வளவு தான்; குழந்தையின் உயிர் நீங்கி விட்டது.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவனுடைய மாமனார் டெலிபோனில் பேசினார். தந்தி யடிக்கச் சிறிது தாமதமாயிற்றென்றும், குழந்தையின் நிலையைத் தெரியப்படுத்த மாறும் அவர் கேட்டார். முடியுமானால், அவ்விடமே ஏதாவது சிகிச்சை செய்யும் படியும் சொன்னார்.

என்ன செய்து என்ன? போன உயிர் திரும்பவில்லை; மந்திரம் ஒன்றும் வேலை செய்ததாகவும் தெரியவில்லை. கடைசியில் வேறு வழியின்றிக் குழந்தையை அடக்கம் செய்து விட்டு, ஜெயராமன் சென்னைக்குச் சென்றான்.

அலுவலகத்தில் உள்ளே அடங்கிக் கிடந்த துயரம் ராஜுவைக் கண்டதும் குமுறிக் கொண்டு வந்தது. 'ஓ' வென்று வாய் விட்டுக் குழந்தைமாதிரி அழ ஆரம்பித்து விட்டான். குழந்தையின் மரணத் திற்குத் தன் விளையாட்டுத்தனமே காரண மென்று அவன் அடிக்கடி தன்னை நொந்து கொண்டான். எப்பொழுதும் அவன் அதே எண்ணத்தில் மூழ்கியிருந்தான். அவனது நிலைமையைக் கண்டு ராஜும் கவலை யடைந்தான்.

அன்று, "உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேணும். ஆனால் அதைச் சொல் வதற்கு முன்னால் என்னை மன்னிப்பதாக நீங்கள் சத்தியம் செய்யுங்கள், சொல் கிறேன்!" என்று ஆரம்பித்தான் ராஜும்.

ஜெயராமனுக்கு எரிச்சலா யிருந்தது. "இப்பொழுதா என்னிடம் விளையாடத் தோன்றுகிறது, உனக்கு!" என்று கடிந்து கொண்டான்.

"ஐயோ, விளையாட்டில்லையே! விஷயத் தைச் சொல்கிறேன், கேளுங்கள். ஆனால் என்னை மன்னித்து விடுவதாக மட்டும் வாக்குக் கொடுங்கள்!"

"சரி, ஆகட்டும். சொல்லு!"

"நீங்கள் அந்த ஸ்டேஷன் மாஸ்டருக்கு உடனே தந்தி கொடுக்கச் சொன்னீர்களே, அதைத்தான் நான் செய்யவில்லை!"

ஜெயராமன் திடுக்கிட்டான். ஆத்திர மும், துயரமும் ஒருங்கே பொங்கி யெழுந்து அவன் நெஞ்சை அடைத்தன. "பின் உன்னுடைய அப்பா என்னை ஏமாற்றவா செய்தார்?" என்று கேட்டான்.

"ஐயையோ, அவரைத் திட்டாதீர்கள்! குற்றவாளி நான்தான்; நானேதான் வேண்டா மென்று சொன்னவன்!"

ஜெயராமனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. தலை சுழல்வது போலிருந்தது. ராஜும் மேலும் சொன்னான்:

"நீங்கள் முதலில் அப்பாவிடம் குழந் தைக்கு நேர்ந்த விபத்தைப் பற்றித் தெரி வித்தீர்களல்லவா? உடனே அப்பா என்னி டம் அந்த விஷயத்தைக் கூறினார். அத் துடன் இன்னொரு விஷயத்தையும் அவர் என்னிடம் தெரிவித்தார். சில மாதங் களுக்கு முன்னால் நம்ம கிட்டு சாஸ்திரிக ளிடம், அப்பா சந்திரனின் ஜாதகத்தை எழுதச் சொன்னாராம். ஜாதகம் எழுதி, சாஸ்திரிகள் பலன் சொல்லும் பொழுது, குழந்தைக்கு நாலாவது வயதில் ஒரு கண்டம் இருக்கிறதென்றும், அதிலிருந்து அவன் தப்புவது கஷ்டமென்றும்

சொன்னாராம். ஒரு வேளை தெய்வ சங்கல்பத்தால் அந்த கண்டத்தி லிருந்து குழந்தை பிழைத்தாலு, ஐந்தாவது வயதில் தன் தகப்பனைக் கட்டாயம் விழுங்கிவிடும் என்றும் சொன்னாராம். இதைச் சொல்லி விட்டு, அவர் குழம்பிய மனத்துடன் ஸ்டேஷன் மாஸ்டருக்குத் தந்தி கொடுக்கப் புறப்பட்டார். நான் அவரை நிறுத்தி, 'தந்தி கொடுக்க வேண்டாம், அப்பா!' என்றேன். அவர் பிரமித்துப் போய், 'என்ன *உளறுகிறாய்?' என்று கேட்டார். 'உளறவில்லை, அப்பா! சரியாகத்தான் சொல்கிறேன்! தெய்வ சங்கல்பத்தால் குழந்தை பிழைத்தால் பிழைக்கட்டும்; இல்லாவிடில் வேண்டாம். குழந்தை இப்போது பிழைத்துப் பிறகு அவர் போய் விட்டால் நான் என்ன செய்வேன்? குழந்தை என் கண்; ஆனால் அவர் என் உயிர்! கண் போனால் அந்தக் கஷ்டத்தைப் பொறுத்துக் கொண்டு நான் உயிர் வாழ முடியும்; ஆனால் கணவன் இறந்தால் எனக்கு என்ன வாழ்வு வேண்டிக் கிடக்கிறது? நீங்கள் தந்தி அடிக்க வேண்டாம். கடவுள் விட்ட வழி நடக்கட்டும். ஆனால் அவரிடம் மட்டும் தந்தி கொடுத்ததாகச் சொல்லி விடுங்கள். உடனே நீங்கள் போய் அவரை இங்கே அழைத்து வந்து விடுங்கள். நான் செய்வது குற்றமானால், அதன் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டு, அதற்குண்டான தண்டனையையும் நானே அனுபவிக்கிறேன்!' என்று நான் அப்பாவிடம் வாதாடினேன். அதனால்தானோ என்னவோ, குழந்தை போயே போய் விட்டது. அதன் காலம் அவ்வளவுதான். நான் செய்த குற்றத்தைப் பொறுத்துக் கொள்வீர்களா?" என்று அவள் தன் கணவனின் முகத்தை நீர் நிறைந்த கண்களால் நோக்கியவாறு கெஞ்சிக் கேட்டாள்.

அவள் என்ன கெஞ்சியும் ஜெயராமனின் மௌனம் அன்று முழுவதும் கலையவே யில்லை.

• • •

நியாயம் நிறைந்த திரைப் படம் ஒன்றைப் பார்ப்பது போல் மேற்படி கதையைக் கேட்டுக் கொண்டிருந்தான் கிருஷ்ண மூர்த்தி. இந்தத் துக்ககரமான சம்பவத்தை நினைத்து நினைத்து அவன் மிகவும் வருந்தினான்.

சிறிது நேரத்திற்குப் பிறகு அவன் ஜெயராமனை நோக்கி, "அண்ணா, நான் போய் வருவதற்குள் இவ்வளவு பெரிய துயரத்திற்கு நீ ஆளாவாய் என்று நான் எண்ணவேயில்லை. இந்த நிலையில் உன்னை நான் குழல் வாசிக்கச் சொன்னது தவறுதான்! மறைந்து கிடந்த அந்த நினைவுகளை வெல்லாம் மறுபடியும் நினைப்பூட்டியதற்காக என்னை மன்னித்துவிடுங்கள்!" என்றான்.

ஜெயராமன் வாயைத் திறக்கவில்லை. அவன் கண்கள் மட்டும் கலங்கி யிருந்தன. மூர்த்தி மேலும் சொன்னான்: "ஆனால் ஒரு விஷயம். என்னுடைய நெடுநாளைய சந்தேகம் ஒன்றை இன்று மன்னி தீர்த்து வைத்து விட்டாள். நானும் எவ்வளவோ யோசித்துப் பார்த்திருக்கிறேன்; பிறரைக் கேட்டு மிருக்கிறேன். ஆனால் சரியான பதில்தான் இதுவரை கிடைக்கவில்லை. 'ஒரு ஸ்திரீ நெருக்கடியான நிலைமையொன்றில் சிக்கிக் கொண்டு, தன் கணவனையோ அல்லது குழந்தையையோ நிர்ப்பந்தமாக இழக்க வேண்டி நேர்ந்தால், அவள் யாரை இழக்கச் சம்மதிப்பாள்? கணவனையா, குழந்தையையா?' என்ற சந்தேகம் எனக்கு அடிக்கடி தோன்றுவதுண்டு. அதற்குச் சரியான பதில், 'குழந்தை என் கண்; கணவன் என் உயிர்!' என்று மன்னி சொன்னதுதான்!" என்றான் அவன்.





# காணாமற்போன ராஜா

ராஜி

ஓர் அரசன் ஒரு நாள் காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். அவன் தன்னுடன் தான் வளர்த்து வந்த வேட்டை நாயையும் அழைத்துக் கொண்டு போனான். வேட்டையாடி விட்டுத் திரும்பும்பொழுது, குறுக்கே வேகமாகப் போன ஒரு பூனையின்மீது நாய் பாய்ந்தது. பாவம், பூனை பயந்து போய் அங்கிருந்த ஒரு குடிசைக்குள் நுழையும் சமயத்தில், வேட்டை நாய் பிடிக்கவே அது உயிரற்றுக் கீழே விழுந்துவிட்டது. பூனையின் அபயக் குரலைக் கேட்டுக் குடிசைக்குள்ளிருந்த ஒரு கிழவி ஓடோடியும் வெளியே வந்தாள். அவள் தன்னுடைய பூனை இறந்து கிடப்பதைப் பார்த்துக் கோபங் கொண்டு, தன் மந்திரக் கோலினால் அரசன் தலையில் ஒரு தட்டுத் தட்டினாள்.

பாவம், அரசன் மனம் நொந்து மிகவும் கவலையுடன் அரண்மனைக்குத் திரும்பினான். அவனுக்கு அந்தரங்க நண்பன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் சேகரன். அரசனுக்கு ஒரு மந்திரி உண்டு. அந்த மந்திரி மிகவும் கெட்ட எண்ணம் படைத்தவன். அரசனை எப்படியாவது விரட்டி விட்டுத் தான் அரசனாக வேண்டுமென்பது அவன் எண்ணம்.

அன்று காலை அரண்மனையில் ஒரே பரபரப்பு. காரணம், திடீரென்று அரசன் காணாமற் போனது தான். அரசனை எப்படியாவது கண்டு பிடிக்க வேண்டும் என்று சேகரன் கவலை கொண்டான். ஆனால் மந்திரியோ, அரசன் அகப்படாமலிருக்க வேண்டுமே என்று கவலைப் பட்டான்!

இந்தச் சமயத்தில் அரசனுடைய அந்தரங்க அறையிலிருந்து மிகவும் அழகான பூனை ஒன்று வெளியே வந்தது. அதைக் கண்டதும் மந்திரியின் நாய் துரத்த ஆரம்பித்தது. சேகரன் தன் கையிலிருந்த பிரம்பினால் அந்த நாயை விரட்டினான்.

"என்னுடைய நாயை நீ எப்படி விரட்டுவாய்? உன்னை என்ன செய்கிறேன், பார்!" என்று மந்திரி சேகரனை மிரட்டினான்.

அதற்குள் பூனை பயந்து போய் அரசனுடைய படுக்கை அறைக்குள் ஓடி ஒளிந்து கொண்டது. சேகரனும் பூனையுடன் படுக்கையறைக்குப் போய்க் கதவைத் தடால் என்று தாளிட்டுக் கொண்டான். ஆகவே, மந்திரியும் அவனுடைய நாயும் ஏமாற்றமடைந்து படுக்கை அறைக்கு வெளியிலேயே நிற்கும்படி நேரிட்டது.

உள்ளே சென்றதும் பூனை சேகரனைப் பார்த்து, "சேகரா, பயப்படாதே! நான் தான் அரசன். இப்பொழுது பூனையாக மாறியிருக்கிறேன். நேற்று மாலை என்னுடைய நாய் காட்டிலுள்ள ஒரு மந்திரவாதிக் கிழவியின் பூனையைக் கடித்துக் கொன்று விட்டது. அதனால் கோபங்கொண்ட கிழவி என்னைத் தன் மந்திரக் கோலினால் தட்டிவிட்டாள். நான் பூனையாக மாறியது அவள் சாபமாகத்தானிருக்க வேண்டும்!" என்று சொல்லவே, அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"என்ன! வேடிக்கையாயிருக்கிறதே! நீங்கள் பூனையாக இருந்தால் எப்படிச் சிம்மாசனத்தில் உட்காருவீர்கள்? இந்த விஷயம் மந்திரிக்குத் தெரிந்தால் அவன் உங்களைக் கொல்லுவதற்கு ஏற்பாடு செய்வதல்லாமல், என்னையுமல்லவா கொன்று விடுவான்!" என்றான் சேகரன்.

"அது மட்டும் இல்லையே! என் ஆயுள் முழுவதும் நான் எப்படிப் பூனையாக இருப்பேன்? பாலை நாக்கினால் நக்கி நக்கி அல்லவா குடிக்க வேண்டும்!" என்று பூனையாக மாறிய அரசன் அழுதான்.

இந்தச் சம்பாஷணையை அரைகுறையாகக் கேட்ட மந்திரி, அதிசயமும் ஆத்திரமும் அடைந்து, "உள்ளே யார் பேசுகிறது? கதவை நீங்களாகவே திறக்கிறீர்களா? இல்லை, நானே கதவை உடைத்துக் கொண்டு உள்ளே வரட்டுமா?" என்று உறுமினான்.

உடனே சேகரன் அங்கிருந்த ஒரு பெரிய மரப் பெட்டிக்குள் அரசனை பூனையை வைத்து மூடினான். அதே சமயத்தில் அந்த அறையின் கதவுகளும் 'படார்' என்று திறந்து கொண்டன. மந்திரி தன் நாயுடன் உள்ளே நுழைந்து, "எங்கே அந்தப் பூனை?" என்று கர்ஜித்தான்.

அப்பொழுது மந்திரியின் நாய் இங்கும் அங்கும் அலைந்து மோப்பம் பிடித்துப் பூனை ஒளிந்திருக்கும் பெட்டியை நெருங்கிப் பலமாகக் குலைத்தது.

உடனே மந்திரி, "பூனையாக மாறிய அரசனை இப் பெட்டியிலா ஒளித்து வைத்திருக்கிறாய்? பெட்டியை உடனே திற! இல்லாவிட்டால் உன்னை என் வாளுக்கு இப்பொழுதே இரையாக்குவேன்!" என்றான்.

சேகரன் எதற்கும் அசைந்து கொடுக்கவில்லை. மந்திரி தானாகவே பெட்டியைத் திறக்க ஆரம்பித்தான். அவனுடைய நாய் பூனைமீது பாயத் தயாராகக் காத்துக் கொண்டிருந்தது. ஆனால் பெட்டியைத் திறந்தவுடன் அதில் பூனையைக் காணவில்லை; அதற்குப் பதிலாக அரசன் பெட்டியிலிருந்து வெளியே வந்தான்! கிழவியின் சாபம் அந்த நேரத்துடன் சரியாய்ப் போகவே, பூனையாக மாறிய அரசன் சுயரூபம் அடைந்து விட்டான்!

"மந்திரி, உன்னுடைய உண்மை எண்ணத்தை இன்றுதான் அறிந்தேன். நான் பூனையாக மாறியது உன் திருட்டுத்தனத்தைக் கண்டு பிடிக்க ஏதுவாயிற்று!" என்றான் அரசன்.

அவ்வளவுதான்; மந்திரி மூர்ச்சையானான்!



"இந்த நாய்க்கு என்னடா இவ்வளவு பெரிய வால்?"

"வால் இல்லேடா அது! ரப்பர் குழாய்: அதன் மேல் அது இத்தனை நேரம் உட்கார்ந்திருந்தது!"

# பாணிக்கிரகணம்




ஐந்தாம் அத்தியாயம்

## மன மாறுதல்

ருக்மணியால் தன் சபதத்தை நிறைவேற்ற முடியவில்லை. ராமஸ்வாமி ஐயங்கார் பிடிவாதமாக காட்டுப் பெண்ணைப் பழமாக்குடிக்கு அழைத்துக் கொண்டு வந்து விட்டார். சாரங்கன் செப்டம்பர் லீவுக்கு அங்கு வரலாம் என்று நினைத்துத்தான் அவர் பூமாவை அழைத்து வந்தார்.

ருக்மணி முதலில் பூமாவுடன் முகம் கொடுத்துப் பேசவில்லை. இது பூமாவின் மனதை உறுத்தினாலும், அவள் இதை எதிர்பார்த்தே யிருந்தாள். ஆனாலும் அவள் தன்னால் இயன்றவரை மாமியாரைத் திருப்தி செய்வதில் முனைந்தாள். கெட்டிக்காரப் பெண்ணானதால் அதில் வெற்றியும் அடைந்தாள்.

ருக்மணிக்குக் காலை காப்பியில் உயிர். அது எப்படி யிருக்க வேண்டும் என்பதைப் பற்றி அவளுக்குச் சில திட்டமான அபிப்பிராயங்கள் உண்டு. ஐந்து மணிக்கே எழுந்து ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்து விடுவாள். காப்பிப் பொடியை ஒரே அடியாக அரைத்து வைத்துக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக உபயோகிப்பதில் ருக்மணிக்கு நம்பிக்கை கிடையாது. அப்படிச் செய்தால் 'காரம்' போய்விடும் என்பது அவ
அபிப்பிராயம். இதற்காக, காலை ஐந்தை
மணிக்கு அன்றாடம் காப்பிக்காக மெஷி
னைச் சுற்ற ஆரம்பிப்பாள். இதனால், பக்க
தில் இருப்பவர்களும் காலை ஐந்தை
மணிக்கே படுக்கையைச் சுருட்ட வேண்டி
திர்ப்பந்தம் ஏற்பட்டது. "ருக்மணி காப்
மெஷின் சுத்த ஆரம்பிச்சாச்சு, தாழிய
விடுத்து!" என்று சொல்லிக் கொண்டே
அவர்கள் எழுந்திருப்பார்கள். சிலர் ருக்மண
யின் காப்பி மெஷினை ஒரு 'அலாரம்' க
காரம் என்று வேடிக்கையாகவும், — எ
கோபமாகவும்கூடக் குறிப்பிடுவார்கள்
ஊருக்குப் புதிதாக வந்திருந்த, பக்கத்
வீட்டுப் பத்மாவனியின் தம்பி, அன்று இர
"திருடன் கன்னம் வைக்கிறான்!" என்
நினைத்து, சத்தம் போடாமல் உலக்கை
எடுத்துக் கொண்டு போய், அவன் கன்ன
வைத்த துவாரத்தின் வழியாகத் தலை
நீட்டும்போது ஒரே போடாகப் போ
வேண்டும் என்று தயாராக இருந்தது
பத்மாவனியின் கணவர் — விடியற் காலை
லேயே எழுந்து வெளியே போயிருந்தவர்—
உள்ளே வந்தபோது, அவர்மேல் உலக்

விழுந்ததும் ருக்மணியின் காப்பி மெஷின் சத்தத்தால் உண்டான விபரீதங்களில் ஒன்று.

முதலில் பூமா காப்பியில்தான் தன் கவனத்தைச் செலுத்த ஆரம்பித்தாள் — சாப்பிடுவதில் அல்ல, அதைப் போடுவதில்! அன்றையதினம் ருக்மணி எழுந்திருப்பதற்கு அரைமணி முன்னதாகவே எழுந்திருந்து, காப்பிப் பொடி அரைத்து, ஐந்தரை மணிக்கு ருக்மணி வந்த போது, சுடச்சுட ஒரு 'கப்' காப்பியை நீட்டினாள்.

நாட்டுப் பெண் 'நைச்சியம்' பண்ணுகிறாளென்று ருக்மணிக்குக் கோபம் வந்தது. "எனக்குக் காப்பி போட உன்னால் முடியாதம்மா!" என்றாள்.

"சாப்பிட்டுத்தான் பாருங்களேன்" என்றாள் பூமா.

ருக்மணி முதலில் பயந்து கொண்டே கொஞ்சம் சாப்பிட்டாள். பிறகு, அவள் பூமாவை ஆச்சரியத்துடன் பார்த்தாள். அவளால் நம்பவே முடியவில்லை. காப்பி அவ்வளவு நன்றாக இருந்தது! கேட்பானேன், அதற்குப் பிறகு ருக்மணி காலை ஆறு மணிக்குத்தான் எழுந்தாள். பல் தேய்த்தவுடன் கிடைத்த நல்ல காப்பியின் காரணமாகக் கொஞ்சம் கொஞ்சமாக அவள் கோபம் மறைந்தது.

பூமாவும் நாளுக்கு நாள் வீட்டு வேலையில் அதிகப் பங்கு எடுத்துக் கொண்டாள். இரவுச் சமையல் அவளுடையதுதான்; வெய்யில் வேளையில் பாத்திரம் தேய்ப்பதும் அவள்தான்.

ராமஸ்வாமி ஐயங்காருக்குப் பரம சந்தோஷம்—தன் மனைவியைப் பூமாவால் திருப்தி செய்ய முடிந்ததே என்பதைப் பற்றி. அதைவிட ஆனந்தத்தைக் கொடுத்தது, ஒரு நாள் அரைத் தூக்கத்தில் அவர் காதில் விழுந்த பாட்டு. உற்றுக் கேட்டார். அருணாசலக் கவிராயரின் 'யாரோ, இவர் யாரோ?' என்ற கீர்த்தனம். பிறகு, மத்தியான வேளையில் அவர் தூக்கத்தைக்கூட மறந்தார். தவறித் தூங்கிவிட்டால், "என்னை எழுப்பவில்லை?" என்று சண்டைக்குப் போனார்!

ஆகஸ்ட் மாதம் மூன்றாம் தேதி. பழமாக் கடிக்குத் தபால்காரன் வரும்போதே அவன் நடையில் ஒரு 'குஷி' இருப்பதாகத் தோன்றியது ராமஸ்வாமி ஐயங்காருக்கு. அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. அவருக்கு ஒரு கடிதம் வந்திருந்தது—சாரங்கனிடமிருந்து.

"அடியே!" என்று அழைத்துக்கொண்டு உள்ளே தாவினார். "சாரங்கன் எழுதியிருக்கான்—'நான் லீவுக்கு ஊருக்கு வருகிறேன். ஒரு வேளை என் சிநேகிதன் ஒருவனையும் அழைத்துக்கொண்டு வரலாம். அவன் நம்ம பக்கத்துப் பையன்தான். ஆனால் அங்கு வந்து ரொம்ப நாள் ஆகிறதாம். என் வகுப்பில் வாசிக்கிறான். பெயர் ராஜு......"

இதுவரையில் அவர் கடிதம் படிப்பதை ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந்த பூமா, "ராஜு!" என்றதும் திடுக்கிட்டாள். "சேச்சே, அவனாயிருக்காது! எவ்வளவோ பேர் இல்லையா, ராஜு என்று!... இருந்தாலும், 'நம்ம பக்கத்துப் பையன்தான். ஆனால் அங்கு வந்து ரொம்ப நாள் ஆகிறதாம்' என்று எழுதியிருக்கிறாரே! பகவானே, இப்படியும் நடக்கவேண்டுமா!" என்று எண்ணும் போது, அவளுக்கு எல்லாம் நேற்று நடந்தது போல்தான் இருந்தது.

ராஜு அவள் அப்பாவுக்கு யாரோ ஒரு உறவினரின் பிள்ளை. அவன் தகப்பனார் பம்பாயில் பெரிய வேலையிலிருந்தார். சம்பளத்திற்குத் தகுந்த செலவு—ஏன் அதற்கு மேலேகூடத்தான். அதிகப் பணம் சம்பாதிப்பதற்கு அவருக்குக் குறுக்கு வழி தோன்றிற்று. பலர் கடைப்பற்றின வழிதான் அது. அமெரிக்காவில் பஞ்சு மார்க்கெட் திறந்தவுடன் விற்கும் விலை தந்தி மூலமாக பம்பாய்க்கு வரும். மார்க்கெட் மூடும்போது விற்கும் விலையும் வரும்.




"மார்க்கெட் திறந்த விலை 36.23: மூடும் விலை 36·27" என்றவாறு இருக்கும் அத் தந்தி. பம்பாயில் இந்த விலையை ஒட்டி ஒரு சூதாட்டம் இன்றும் நடக்கிறது. மேற்படி ஆட்டத்தில் மோகம் கொண்டவர்கள் கவனம் முழுவதும் கடைசி இலக்கத்தில்தான் இருக்கும். தந்தி வருவதற்கு முன்

"இன்று ஆரம்ப விலை மூன்றுதான் வரப்போகிறது" என்று சொல்லி இந்தச் சூதாட்டத்தை வியாபாரமாக நடத்தும் ஆசாமிகளிடம் பத்து ரூபாய் பணம் கட்டு வார்கள். மூன்று வந்து விட்டால் பத்து ரூபாய் கட்டினவருக்கு தொண்ணூறு ரூபாய் திரும்பி வரும். "மூன்று ஆரம்பம்: ஒரு முடிவு" என்று இரண்டையும் சேர்த்துச் சரியாகச் சொல்லி விட்டால், பத்து ரூபாய் பணம் கட்டினவருக்கு 810 ரூபாய் வரும்! ரொம்ப லாபகரமான வியாபாரந்தான். இப்படித்தான் ராஜுவின் தகப்பனாரும் நினைத்தார். அவர் கட்டின நம்பர் முதல் நாளே வந்து விட்டது. பாவம், பத்து ரூபாய்தான் கட்டியிருந்ததால் 810 ரூபாய் தான் வந்தது! அதிர்ஷ்டத்தை விடக் கூடாது என்று மேலும் மேலும் கட்டிக் கொண்டே போனார். ஆனால் அந்தப் பாழாய்ப் போன நம்பர் இவருடன் ஒத்து ழைக்க மறந்து விட்டது! அவர் மட்டும் நம்பிக்கையை இழக்கவில்லை. இன்று நூறு ரூபாய் கட்டினார், நாளை இருநூறு ரூபாய் கட்டினார். இவ்வாறு படிப்படியாக உயர்ந்து கொண்டே சென்றது, கட்டும் பணத்தின் தொகை. இரவு தூக்கம் கிடையாது. கூடிய சீக்கிரத்தில் பலனும் கிடைத்து விட்டது. ஆபீஸ் பணத்தை எடுத்து லாபம் சம்பாதிக்க முயன்றதற்காகக் காராக்கிரக வாசமும் கிடைத்தது. பிறகு அதிக நாள் அவர் உயிரோடு இருக்கவில்லை. பூமாவின் தகப்பனார், அவர் இறக்குமுன் பார்ப்பதற்காகப் பம்பாய்க்குச் சென்றிருந்தார். ராஜுவை அவரிடம் ஒப்படைத்து, "எப்படியாவது இந்தப் பிள்ளையை நீ படிக்க வைத்து உத்தியோகத்தில் அமர்த்திவிடு!" என்று சொல்லிவிட்டு அவர் காலமானார்.



ராஜு பூமாவின் தகப்பனாருடன் ஊருக்கு வந்தான். அவனுக்கு அப்போது பத்து வயது; பூமாவிற்கு ஐந்து வயது. இருவரும் சேர்ந்து வளர்ந்தார்கள். பூமாவின் தகப்பனார், ராஜு அவளுக்குத் தகுந்த வரன் என்றுதான் நினைத்தார்; வாய் விட்டும் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் பூமாவின் தாயாருக்கு இதில் சம்மதமே கிடையாது. "போயும் போயும் என் ஒரே பெண்ணை ஜெயிலுக்குப் போனவன் பிள்ளைக்கா கொடுக்க வேணும்?" என்று சொல்லுவாள். பார்க்கப் போனால், அவளுக்கு யாரோ 'தெருவில் போகிறவனுக்கு'த் தன் கணவர் பணத்தைச் செலவழித்துப் படிக்க வைப்பதுகூடப் பிடிக்கவில்லை. இதனால் வீட்டில் சச்சரவுகள் அடிக்கடி வரும். ஆனால் என்ன காரணத்தினாலோ பூமாவின் தகப்பனார் ராஜுவின் விஷயத்தில் பிடிவாதமாயிருந்தார். அவரும் எதிர்பார்க்கவில்லை, அப்படி நடக்குமென்று......

தனக்கு நினைவு தெரிந்தது முதல் ராஜு பூமாவிடம் விசேஷ அன்பு செலுத்தினான். அத்துடன், அந்த வயதில்தான் அவன் மட்ட ரகமான ஆங்கில நாவல்களைக் கணக்கில்லாமல் படித்துக் கொண்டிருந்தான். "மேல் நாட்டு வாழ்க்கையே வாழ்க்கை. கல்யாணம் பண்ணிக் கொண்டால் அவர்கள் மாதிரிக் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும்! காதல் இல்லாமல் கல்யாணமா?......அதுவும் முன்பின் பார்த்திராத ஒரு பெண்ணை?......அவர்கள் சொல்வதில் தப்பென்ன? நம் ஜனங்கள் காட்டுமிராண்டிகள்தான்!" — இப்படித்தான் அவன் மனம் எண்ணிக் கொண்டிருந்தது.

"ஆனால் நான் அப்படியெல்லாம் இருக்க மாட்டேன். நான் பூமாவை மனப்பூர்வமாகக் காதலிக்கிறேன். ஆனால் அவளி[illegible] ஒரு வார்த்தை கேட்க வேண்டாமா? நான் மட்டும் காதலித்து என்ன பிரயோஜனம்? அவள் மனம் எப்படியிருக்கிறதோ!"—

இப்படி அவன் உள்ளத்திற்குள் ஒரு போராட்டம்.

கடைசியில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டான். "என் ஆருயிர்க் காதலி பூமாவுக்கு, உனக்குத் தெரியும், என் உடல் பொருள் ஆவி எல்லாவற்றையும் நான் உனக்காக இழந்து விட்டேன் என்பது. இருந்தாலும் உன் மனம் மட்டும் ஏன் கல்லா யிருக்கிறது? எனக்குத் தயை காட்ட மாட்டாயா? — ராஜு" என்று ஒரு கடிதம் எழுதி, பூமா இருந்த அறையில் ஜன்னல் ஓரமாக, அவள் உட்கார்ந்திருந்த பக்கத்தில் போட்டு விட்டான். போடும்போதே அவன் கை நடுங்கிற்று; உடம்பெல்லாம் வியர்த்தது.

"அது என்னடி, 'டக்'குன்னு விழுந்தது! தேனா, என்ன?" என்று பூமாவின் தாயார் கேட்டது அவன் காதில் விழுந்ததும், "ஐயோ!" என்று அவன் வாய்விட்டு அலறிவிட்டான்.

பூமாவின் தாயார் அந்தக் கடிதத்தை எடுத்துப் படித்தாள். அவள் முகம் சிவந்தது. "இந்த நாடகமெல்லாம் எத்தனை நாளா! நானும் தான் எத்தனை நாளாய் அடிச்சுக்கிறேன், என் பேச்சை யாராவது கேட்டால்தானே? திருடன் பின்னே திருடன்தான்!"—இப்படி இரைந்துகொண்டே அவள் தன் புருஷனை நோக்கி நடந்தாள்.

அதிகம் சொல்வானேன்? வெகு சீக்கிரத்தில் ராஜு வீட்டைவிட்டு வெளியேறும்படி ஆகிவிட்டது......

இந்தச் சம்பவம் நடந்தபோது பூமாவுக்கு வயது பதின்மூன்று; ராஜுவுக்குப் பதினெட்டு. ஆனால் எல்லாம் நேற்று நடந்ததுபோல்தான் இருந்தது......

"அவர்கள் சேர்ந்து வருவது ஒரு விதத்தில் நல்லதுதான். என் மேல் தப்பு இருந்தால்தானே பயம்? நடந்ததை நடந்தபடியே சொல்லி விடுகிறேன். பிறகு நடப்பது நடக்கட்டும்!" என்று பூமா நினைத்தாள்.

சாரங்கனின் சிரித்த முகம் அவள் கண் முன் தோன்றிற்று. அதை நினைக்கும் போது அவளுக்கு நம்பிக்கை உண்டாயிற்று. ஆனால் நாம் நினைத்தபடி எல்லாம் நடந்தால், வாழ்க்கை இவ்வளவு கஷ்டமாய்—அல்லது ருசியாய்—இருக்குமா?

## ஆறும் அத்தியாயம்
## யுத்த அரங்கம்

சாரங்கன் எங்கே போகிறோம் என்பதை அறியாமலே கால் இழுத்துச் சென்ற பக்கம் நடந்து கொண்டிருந்தான்.

ஆம், அன்று அவன் மனம் பட்ட பாட்டிற்கு உவமை கூற வேண்டுமானால் அந்தப் பழைய கதையைத்தான் திருப்பிச் சொல்ல வேண்டும். குரங்கு சுபாவத்திலேயே 'சிவனே!' என்று உட்கார்ந்திருக்கக் கூடிய ஜந்துவல்ல. அதிலும், இயற்கைக்கு மேலாகவே கொஞ்சம் சேஷ்டை குணமுள்ள வானரம் ஒன்று—விருச்சிக லக்னத்தில் பிறந்தது என்று வைத்துக் கொள்ளுங்களேன் — காலையில் ஒரு மரத்தின் மேல் ஏறிற்று. அது ஈச்ச மரம். உச்சியில் பானையி லிருந்த பழஞ் சரக்கை முடிந்த மட்டும் குடித்தது. இறங்குவதே வெகு கடினமா யிருந்தது. உடனே, பக்கத்திலிருந்த பனைமரத்தின்மீது தாவிற்று. அங்கே வெகு நாளாகக் கொட்டுவதற்கு ஒருவரும் அகப்படவில்லையே என்று ஏங்கிக் கிடந்த ஒரு தேள் குடும்பம். மேற்படி வானரத்தின் கையிலும் முதுகிலும் தன் கைவரிசையைக் காண்பித்தது. போதுமா குரங்குக்கு? ஆனால் விதிக்கு இன்னும் கொஞ்சம் விளையாட வேண்டும்போலிருந்ததோ என்னமோ, அருகிலிருந்த புளிய மரத்தில் வசித்து வந்த ஒரு துர்தேவதையை அக் குரங்கின் மீது ஏவிவிட்டது! குரங்கின் மனம் எப்படி யிருக்கும்?

சாரங்கனின் மனம் அல்லல் பட்டதற்குக் காரணங்கள் பல. அரசியலில் மும்முர



மாக ஈடுபட்டவன் அல்ல அவன். இருந்தாலும் நாட்டில் அடித்த புயல் காற்று அவனைத் தாக்காமலில்லை. காந்தி மகாத்மாவின் எழுத்தும் பேச்சும் அவனைத் தட்டி எழுப்பின. "இது வே என்னுடைய கடைசிப் பரீட்சை......ஆங்கிலேயர்களே! மூட்டையைக் கட்டுங்கள்! நாட்டைக் கடவுளிடமாவது ஒப்படைத்து விடுங்கள். நீங்கள் போவதால் அராஜகம் ஏற்பட்டாலும் பாதகமில்லை" என்று அவர் கூறியது ஒவ்வொரு இந்தியனுக்கும் ஒரு வேகத்தைக் கொடுத்து, "இனிமேல் நாம் திரும்பிப் பார்க்க முடியாது. சுகத்திற்கோ, கெடுதலுக்கோ நாம் போர்க்களத்தில் குதித்து விட்டோம். இனி, சுதந்திர இந்தியாவைக் கண்டபின்தான் இப்போரை நிறுத்துவோம்!" என்று ஜவஹர்லால் அறை கூவியதும், சர்தார் பட்டேல், "இதுவரை நடந்தது எல்லாம் விளையாட்டுச் சண்டை; இன்று ஆரம்பிப்பதுதான் நமது நிஜ, சுதந்திர யுத்தம்!" என்று சவால் விட்டதும், மௌலானா ஆஸாத், "இனிமேல் அவரவர்களுக்கு அவரவர்களே தலைவர்கள். எங்களைச் சிறையில் போட்டவுடன் நீங்கள் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்துவிடாதீர்கள். போரை விடாது நடத்துங்கள்!" என்று கட்டளையிட்டதும், சாரங்கன் காதில் ஒலித்துக் கொண்டிருந்தன. எல்லாவற்றையும்விட அவன் உள்ளத்தில் தீயைக் கிளப்பியது காந்தி மகாத்மாவின் கடைசி உபதேசம்தான். "யுத்தம் செய்யுங்கள், இல்லாவிட்டால் உயிரை விடுங்கள்!" என்று அவர் கூறியதையும், அதை லக்ஷக்கணக்கான ஜனங்கள் ஆவேசத்துடன் ஆமோதித்ததையும் நினைத்து நெஞ்சம் உருகாதவன் இந்தியனாயிருக்க முடியுமா?

ஆனால் இவை எல்லாவற்றையும் விட சாரங்கன் மனதை வேதனை செய்தது அவன் அன்று அறிந்து கொண்ட சமாசாரம்.

சாரங்கன், ராஜூவின் அறைக்குப்போன போது, அவன் பெட்டியை ஒழித்துக் கொண்டிருந்தான். அதிலிருந்த போட்டோ ஒன்றை ராஜூ எடுத்துப் போட்டதும், "உனக்குக் கோபாலய்யங்காரைத் தெரியுமா? அல்லது அவர் ஏதாவது உறவா?" என்று சாரங்கன் கேட்டான்.

ராஜூ ஒரு பெருமூச்சு விட்டான். "சாரங்கா, அவர் ஒரு மகான். அவர் இல்லாவிட்டால் நான் நடுத் தெருவில் நிற்க வேண்டியவன்தான்!" என்று ஆரம்பித்து, தன் தந்தை சூதாட்டத்தில் எல்லாவற்றையும் தோற்றுச் சிறைசென்றதையும், இறக்கும்போது அவனைக் கோபாலய்யங்காரிடம் ஒப்படைத்ததையும் விவரமாகச் சொன்னான். "கோபாலய்யங்கார் என்னை அழைத்து வந்திரா விட்டால், பம்பாயில் நான் தெருத் தெருவாக அலைந்து கொண்டிருக்க வேண்டும். அப்பேர்ப்பட்ட மகானுக்கு சங்கடமே ஏற்பட்டது. அவருக்கு ஒரு பெண் இருக்கிறாள். கதையிலெல்லாம் ரம்பை, திலோத்தமை என்று வர்ணிக்கிறார்களே, அவர்களில் ஒருவரையும் நாம் பார்த்ததில்லை; அதனால் அவர்கள் அழகைப் பற்றி நாம் ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் பூமாவை நீ பார்த்திருந்தாயானால், அவளை மிஞ்சின அழகுடைய இன்னொரு பெண்ணைப் பார்ப்பது துர்லபம் என்றுதான் நீயும் எண்ணியிருப்பாய். நான் சும்மா யிருந்திருந்தால், பூமாவை எனக்கே கல்யாணம் பண்ணிக் கொடுத்திருப்பார்கள். கோபாலய்யங்காருக்கும் அதுதான் எண்ணம். ஆனால் சிறுபிள்ளைத்தனமாக நான் ஏதோ செய்துவிட்டேன். இப்போது நினைத்தால் அது அப்படி ஒன்றும் பிரமாதமான தப்பென்று எனக்குத் தோன்றவில்லை. "உன்னைக் காதலிக்கிறேன். நீ ஏன் என்னை நிராகரிக்கிறாய்?" என்று என்னென்னமோ உளறி அவளுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தேன். அது பூமாவின் அம்மா கையில் அகப்பட்டுக் கொண்டது. அதனால் அந்த க்ஷணமே நான் அவர்களுடைய வீட்டை விட்டு வெளியே வந்து விடும்படி நேர்ந்தது. அப்படியும் கோபாலய்யங்கார் என்னை நிராகரிக்கவில்லை. எனக்குத் தெரியாது என்று அவர் நினைத்துக் கொண்டிருக்கிறார் — ஆனால் எனக்கு நன்றாய்த் தெரியும், என் படிப்புக்குப் பணம் அனுப்புவது அவர்தான் என்பது. ஒரு வருஷமோ, இரண்டு வருஷமோ, படிப்பை முடித்துவிட்டு, ஏதாவது ஒரு வேலையைப் பார்த்துக் கொண்டு அவர் காலில் போய் விழுந்து என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்ளப் போகிறேன். அவரும் மனம் இளகிப் பூமாவை எனக்குக் கொடுத்தாலும் கொடுப்பார். ஒன்று மட்டும் நிச்சயம். பூமாவுக்கு என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள இஷ்டம்தான். அந்த நாளிலேயே எனக்கு அது தெரிந்துவிட்டது......"

ராஜூ பேச்சைச் சட்டென்று நிறுத்தினான். "சாரங்கா, உனக்கு என்ன மயக்

கம் மயக்கம் வருகிறதா? இத்தே இரு! ஒரு டம்ளர் ஜலம் கொண்டு வருகிறேன்!" என்று ஓடினான்.

சாரங்கன் அதற்குள் தன்னைத்தானே சமாளித்துக் கொண்டு விட்டான்.

ராஜூ வந்தவுடன், "ஒன்றுமில்லை, ராத்திரி ரொம்ப நாழி தூக்கம் இல்லை. அதுதான் கொஞ்சம் தலையைச் சுற்றிற்று. இப்போது தேவலை!", என்று ஒரு பொய் சொன்னான். பிறகு, "நான் வருகிறேன்" என்று சொல்லிவிட்டு நடந்தான்.

மூன்று மைலுக்கு மேல் நடந்ததுகூட அவனுக்குத் தெரியவில்லை......

எதிரே ஜனங்கள் கூட்டமாக நின்று கொண்டிருந்தார்கள். கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு சாரங்கன் முன்னால் சென்றான். ஒரு கவர்ன்மெண்டு ஆபீஸ் முன் காலைந்து பேர் நின்று கொண்டு, "உங்கள் வேலையை உடனே விடுங்கள்! சர்க்காரிடம் போய் ஏன் உத்தியோகம் பார்க்கிறீர்கள்? நம்மை அடிப்பவர்களின் காலை ஏன் நாடுகிறீர்கள்? இந்த சாப்பாட்டுப் பிழைப்பு உங்களுக்கு எதற்கு?" என்று கூவிக் கொண்டிருந்தார்கள். சாரங்கன் உற்றுக் கவனித்தான். "இதென்ன, கிருஷ்ணகுமாரிகூட அங்கு மறியல் செய்கிறாளா, என்ன?" — அதற்குள் ஐந்தாறு ஸோல்ஜர்கள் கையில் ரிவால்வருடன் அங்கே நுழைந்தார்கள். சாரங்கன் மனதில் பலவித எண்ணங்கள் தோன்றின. கிருஷ்ண குமாரிக்கு ஆபத்து வருவதற்கு முன் அவளை அழைத்து வந்துவிட வேண்டுமென்று அவன் முன்னால் பாய்ந்தான்.

அதற்குள் ஒரு போலீஸ் லாரி இருபது கான்ஸ்டேபிள்களோடு அங்கு வந்து விட்டது. ஐந்து பேரோடு ஆறுவது பேராகச் சாரங்கனும் கைதியானான்.

லாரியில் ஏறும்போது எல்லாக் கூச்சல்களையும் தாண்டி கிருஷ்ணகுமாரியின் குரல் அவன் காதில் விழுந்தது.

"கங்கிராசுலேஷன்ஸ், மிஸ்டர் சாரங்கன்!" என்று அவள் சொல்லி முடிப்பதற்கு முன், "என்ன, இன்னுமா அந்த அடிமை பாஷை!" என்றார் ஒரு தீவிர தேசபக்தர்.

(தொடரும்)

இருந்து புறப்பட்டு வருகிறாய்; நீ யார்: உன்னைத் தெரியவில்லையே. சொல்ல வேண்டும்; என இயம்பலுற்றான்: என்று சொன்னான் ராமன்.]

“நீ யார்?” என்று ராமன் கேட்டதும், அநுமனுக்கு எவ்வளவோ திருப்தி உண்டாய்விட்டது. மிக்க உற்சாகத்தோடு பேசுகிறான்:

“நீலமேகம் போன்ற மேனியனே, செந்தாமரையையொத்த கண்ணனே, உன் கண்ணைப் பார்த்தால் யாருக்குமே ஆசை உண்டாகும். பெண்கள் பார்த்தால் அவர்கள் என்ன பாடு படுவார்கள் என்று சொல்லவா வேண்டும்!” என்றெல்லாம் மனமார வாயாரப் புகழ்கிறான்.

“மஞ்செனத் திரண்டகோல
மேனிய! மகளிர்க்கெல் லாம்
நஞ்செனத் தகையவா கி,
நளிர்இரும் பனிக்குத்தேம் பாக்
கஞ்சமொத்(து) அலர்ந்தசெய் ய
கண்ண! யான் காற்றின்வேந்
தற்(கு)
அஞ்சனை வயிற்றின்வந் தேன்
நாமமும் அநுமன்” என் றான்.

[மஞ்சு எனத் திரண்ட கோல மேனிய: நீல மேகம்போலத் திரண்ட அழகிய உருவத்தை உடையவனே; மஞ்சு: மேகம்; மகளிர்க் கெல்லாம் நஞ்சு எனத்தகையவாகி: பெண்களுக்கு மிக்க காதல் நோயை உண்டாக்கும்படியாய்; நளிர் இரும்பனிக்குத் தேம்பாக் கஞ்சம் ஒத்து: மிகவும் குளிர்ந்த பனி பெய்த போதும் வாடாத ஒரு அரிய தாமரை புஷ்பத்தை ஒத்து; அலர்ந்த செய்ய கண்ண: விரிந்த சிவந்த கண்களை உடையவனே; யான் காற்றின் வேந்தற்கு அஞ்சனை வயிற்றில் வந்தேன்: வாயு பகவானைப் பிரார்த்தித்ததின் காரணமாக என் அன்னை அஞ்சனை என்பவள் என்னைப் பெற்றாள்.

குறிப்பு:—அநுமனது ஜாதி ஒரு தனிப்பட்ட ஜாதி. அந்த ஜாதியின் வழக்கம் தாயையே முதன்மையாகக் கொள்ளுவது. எந்த தெய்வத்தை ஆராதித்துக் குழந்தை பிறக்கிறதோ அந்த தெய்வத்தையே தந்தையென்று உபசரிப்பது அவர்கள் மரபு. அந்த மரபை ஒட்டியே அநுமன் பேசுகிறான். இதைப் போலவே சுக்ரீவனைச் சூரியனது மகன் என்றும், வாலியை இந்திரனது மகன் என்றும் சொல்லி வந்தார்கள்.]

தன்னுடைய பெயர் அநுமன் என்று சொல்லியாய்விட்டது. பிறகு தன்னுடைய அரசனைப் பற்றிச் சொல்லுகிறான். “சூரிய புத்திரனான சுக்ரீவன் என்ற எங்கள் அரசன் இந்த மலைப் பிரதேசத்தில் வாழ்ந்து வருகிறான். அவனுடைய ஏவலாளன் நான். உங்கள் வருகையை ஆசையோடு எதிர் பார்க்கிறான். உங்களை வரவேற்று விசாரிப்பதற்காக என்னை அனுப்பியிருக்கிறான்” என்று மிக்க அன்போடும் மரியாதையோடும் சொல்லுகிறான்.

“இம்மலை யிருந்துவா ழும்
எரிகதிர்ப் பரிதிச்செல் வன்
செம்மலுக்(கு) ஏவல்செய் வேன்
தேவ! நும் வரவு நோக்கி
விம்மலுற்(று) அனையான்ஏ வ
வினவிய வந்தேன்” என் றான்
எம்மலைக் குலமும்தா ழ
இசை சுமந்(து) எழுந்ததோ ,
ளான்.

[எரிகதிர்ப் பரிதிச் செல்வன்: பிரகாசம் கொண்ட கிரணங்களை வீசும் சூரியனாகிய தேவதையின்; செம்மலுக்கு ஏவல் செய்வேன்: புத்திரனான சுக்ரீவ மன்னனுக்கு ஏவலாளன் நான்; தேவ நும் வரவு நோக்கி விம்மலுற்று: தேவரீர்களாகிய உங்கள் வரவை எதிர்பார்த்து மிக்க ஆசை கொண்டு; அனையான் ஏவ: அந்தச் சுக்ரீவன் கட்டளையிட; வினவிய வந்தேன்: உங்களை விசாரிப்பதற்காக இங்கே வந்தேன்; எம் மலைக் குலமும் தாழ: எத்தனை மலைக் கூட்டங்களைச் சேர்த்தாலும் பருமன் போதாது என்று சொல்லும்படி; இசை சுமந்து எழுந்த தோளான்: புகழாகிய சுமையைச் சுமந்து விம்மிய தோளையுடைய அநுமன்; இசை சுமந்த தோள்: சக்தியாலும் வீரத்தாலும் புகழ் பெற்ற தோள்.

குறிப்பு:—ராம லக்ஷ்மணர்களைப் பார்க்க நேர்ந்த ஒருவன் சுக்ரீவ மன்னனிடம் வந்து, “உயர்ந்த ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்களாய் இருக்க வேண்டும். வெகு தூர தேசத்திலிருந்து பாதசாரிகளாய் நடந்து வருகிறார்கள், யாரோ தெரியவில்லை!” என்று சொல்லி வைத்தான். சுக்ரீவனுக்கு வந்தவர்களிடத்தில் பரிவு உண்டாகி, அவர்களை யார் என்று விசாரித்து அழைத்து வரும்படியாக அநுமனை ஏவினான் என்பது தெரிய வருகிறது.]

உயர்ந்த குடிப் பிறப்பு, நாகரிகம், வீரம் எல்லாவற்றையும் ராம லக்ஷ்மணர்களுடைய திவ்ய உருவங்கள் விளக்குகின்றன. அவர்களைக் கண்ட மாத்திரத்தில் ஈடுபட்ட அநுமனது வார்த்தைகள் இவை. ராமன் எப்படி அநுமனைப் பார்க்கிறான் என்பதை இனி பார்க்கலாம்.

# போதும், போதும்!



MEALS SECTION
சரி
என்ன ஐயர்! எவ்வளவு நாழியா காத்துக்கிட்டு இருக்கிறது? எல்லோருக்கும் சாம்பார் போடும்.




MEALS SECTION
என்ன ஓய், எல்லோருக்கும் சாம்பார் போடச்சொன்னால் நீர் பாட்டுக்கு ஒரு கரண்டியிலே கொண்டு வருகிறீரே. பாத்திரத்தோடு கொண்டுவந்தால் என்ன?




MEALS SECTION
எல்லாம் எனக்குத் தெரியும் ஸார். உங்கள் இலைகளில் உள்ள சாதத்திற்கு இந்த ஒரு கரண்டிக்கு மேலேயா ஆகிவிடப்போகிறது!


ரெஸாக்

# பேனா நண்பர்கள்

ஸோமாஸ்

தோழி மாலினிக்கு,

உங்கள் பேனா நண்பர்கள் சங்கத்தில் நானும் சேர்ந்து கொள்ள வேண்டும் என்னும் விருப்பம் எனக்கு வெகுநாட்களாக உண்டு.

சமீபத்தில் ஒரு பத்திரிகையில் உங்கள் சங்கத்தைப் பற்றி ஒரு குறிப்பு வெளியாகியிருந்தது. அதில், "இந்தப் பேனா நண்பர்கள் சங்கத்தில் புருஷர்கள் சேரக் கூடாது. இது பெண்களுக்கு மட்டும் பிரத்தியேகமாக நடத்தப்படும் சங்கம். முன்பின் தெரியாத ஆண்களும் பெண்களும் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்ளுவதால் விபரீதம் ஏற்படலாம் என்பதே இந்தக் கட்டுப்பாட்டுக்குக் காரணம்!" என்று எழுதியிருந்தது.

பேஷ்! எனக்கு ரொம்பப் பிடித்த விஷயம் இதுதான். புருஷர்களின் பொறுப்பற்ற தன்மைக்கு ஒரு சவுக்கடி! இந்தக் குறிப்புத்தான் என்னையும் அந்தச் சங்கத்தில் சேரத் தூண்டியது.

அடாடா! என்னென்னவோ எழுதிக் கொண்டே போகிறேனே! என்னை உங்கள் சங்கத்தில் சேர்த்துக் கொண்டதற்கு நன்றி தெரிவிக்கவே யில்லையே! ரொம்ப வந்தனம். இனி, பொழுது போவதில் சிரமம் ஒன்றும் இருக்காது.

பம்பாயில் நடந்த பாரதி பாட்டுப் போட்டியில் முதல் பரிசு பெற்றதாக உன் பெயரும் படமும் பத்திரிகையில் வெளியாகியிருந்ததைப் பார்த்ததிலிருந்து உன்னைப் பார்க்க வேண்டும், உன்னுடன் பேச வேண்டும் என்னும் ஆசை தாங்க முடியாமல் ஏற்பட்டு விட்டது. நல்ல வேளையாக அந்தப் பத்திரிகையில் உங்கள் பேனா நண்பர்கள் சங்கத்தைப் பற்றியும் அதில் நீ உதவி காரியதரிசி என்றும் குறிப்பிட்டிருந்தது. அந்தக் குறிப்பைக் கவனித்த பிறகுதான் உனக்குக் கடிதம் எழுதுவதில் எனக்கு அளவற்ற உற்சாகம் உண்டாயிற்று.

முதல் முதல் ஒருவருக்குக் கடிதம் எழுதும்போது என்ன எழுதுவது என்றே தோன்ற மாட்டேன் என்கிறது. 'மாலினியும் நம்மைப் போல் ஒரு பெண்தானே? அவளுக்குக் கடிதம் எழுதுவதில் என்ன வெட்கம்?' என்று நினைத்துக் கொண்டு எழுத ஆரம்பித்தேன்.

என்னைப் பற்றி ஒன்றும் எழுதவே யில்லையே! நான் பி. ஏ., பாஸ் செய்து விட்டு விஞ்ஞான ஆராய்ச்சியில் இறங்கியிருக்கிறேன். வறட்டு ஆராய்ச்சியில் இறங்கிக் குழம்பிப் போயிருக்கும் என் மூளைக்கு இந்த மாதிரி அளவளாவிக் கடிதம் எழுதுவது ஒரு புது உணர்ச்சியையே தருகிறது. அதுவும் உன்னிடமிருந்து வரப்போகும் அன்பு கனிந்த பதிலை நினைத்தாலே என் உடம்பை என்னவோ செய்கிறது! உன் பதிலைப் பார்த்து விட்டேனானால் எனக்கு எழுத மேலும் கற்பனை தானாகவே உதயமாகும். உன்னைப் பற்றிய விவரங்களையெல்லாம் எழுதுவதுடன் உன் படம் ஒன்றும் எனக்கு அனுப்பி வை.

அன்புள்ள,
ராதா

அன்புள்ள ராதா,

உன் கடிதம். நீ ரொம்ப புத்திசாலி. வெகு சீக்கிரத்தில் சிநேகம் சம்பாதித்துக் கொள்ளும் அருங் குணம் உன்னிடம் இருக்கிறது. பாரதி பாட்டுப் போட்டியில் நான் முதல் பரிசு பெற்ற விஷயம் பத்திரிகையில் ஒரு மூலையில் வெளியாகியிருந்தது. அதை எப்படியோ கவனித்துப் பார்த்திருக்கிறாயே!

நானும் தமிழ் நாட்டைச் சேர்ந்தவளாகிலும் என் தகப்பனார் பம்பாய்க்கு வந்து குடியேறி எத்தனையோ வருஷங்களாகின்றன. ஆகையினால் தமிழ் நாட்டிலிருந்து நீ எழுதும் கடிதம் எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சியை அளிக்கிறது.

என் தகப்பனார் ஒரு பெரிய சேட்டுடன் இங்கு கூட்டு வியாபாரம் செய்கிறார். நான் இண்டர்மீடியட் பாஸ் செய்தேன். பிறகு எனக்குப் படிப்பில் அவ்வளவாக மனம் செல்லவில்லை. சங்கீதம், அபிநயம் முதலிய லலித கலைகளில் எப்போதுமே விருப்பம் அதிகம். இப்போது என்னுடைய நேர

முழுவதையும் அதிலேயே செலவிட்டு வருகிறேன்.

உன் விருப்பப்படி இத்துடன் என் போட்டோ அனுப்பியிருக்கிறேன். அது எப்படியிருக்கிறது என்று ஒரு விமரிசனம் எழுதியனுப்பு, பார்க்கலாம். உன் படம் எனக்கு அனுப்ப வேண்டாமா? அடுத்த தபாலில் அனுப்பி வை.

அன்புள்ள,

மாலினி.

அன்புள்ள மாலினி,

உன் கடிதம் எனக்கு ரொம்பவும் பிடித்தது. அத்துடன் உன் கடிதத்தில் நீ ஊட்டியிருக்கும் ரோஜா அத்தரின் நறு மணம் அப்படியே என்னைத் தூக்கியடித்து விட்டது. கடிதத்தைத் தொட்ட கை மணக்கிறது; வைத்த இடம் மணக்கிறது; கடிதத்தைப் படித்ததும் என் சிந்தனையும் மணக்கிறது; என், என் அறை முழுவதுமே மணக்கிறது!

நீ பொல்லாதவளாக இருப்பாய் போலிருக்கிறதே! உன் போட்டோவை அனுப்பி அதற்கு என்னிடம் விமர்சனம் வேறல்லவா கேட்கிறாய்! ஒரு பெண்ணின் அழகை இன்னொரு பெண் எவ்வளவு வர்ணித்தாலும் அது சுவாரஸ்யப்படாது. இருந்தாலும் என் அபிப்பிராயத்தை எழுதுகிறேன்.

நான் மட்டும் விவாகம் ஆகாத ஒரு வாலிபனாக இருந்து, என் தகப்பனார், "உனக்குப் பார்த்திருக்கும் பெண் இவள்தான்!'' என்று உன் படத்தைக் காண்பித்தாரானால், நான் கண்ணை மூடிக் கொண்டு சம்மதம் கொடுத்து விடுவேன். அது மட்டும் அல்ல; உன் காதலைப் பெறுவதற்கு எத்தகைய தியாகங்களையும் புரிவேன்; உதாரணமாகச் சொல்லப் போனால், 'காற்றில் ஏறி அவ் விண்ணையும் சாடு'வதற்குக்கூட நான் தயங்கேன்; தயாராகவே நான் இருப்பேன்!

இணையற்ற உன் ரூப சௌந்தரியத்தைக் காணும்போது என் மனத்தில், உன் கரம் பிடிக்கும் பாக்கியவானின் உருவமும் கற்பனையில் தோன்றுகிறது. ஆகா! அவன் யாரோ! என்ன பேரோ!

ஒரு விதத்தில் நம் நட்பைப் பற்றி நினைக்கும்போது எனக்கு மகிழ்ச்சியைவிட மனக் கஷ்டமே அதிகமாக உண்டாகிறது. காரணம், நாம் இருவரும் பெண்கள் என்பது தான். நம் நட்பெல்லாம் கல்யாணம் ஆகிற வரையில்தானே! அதற்குப் பிறகு நாம் கணவனுடன் எந்த ஊரில் இருப்போமோ? யார் கண்டது? இந்த விஷயத்தில் புருஷர்கள்தான் சுதந்திரமுடையவர்களாயிருக்கிறார்கள். பால்ய நட்பை வயோதிகம் வரையில் அவர்களால்தானே கொண்டாட முடிகிறது, இல்லையா?

அன்புள்ள,

ராதா.

அன்புள்ள ராதா,

உன் கடிதம் என் மனதை உருக்கி விட்டது. பேதைப் பெண்ணின் இதயம் அதில் அப்படியே பிரதிபலிக்கிறது. எனக்கு



என்ன பதில் எழுதுவது என்றே தோன்றவில்லை. என் படத்தைப் பற்றி உன் விமரிசனம் ரொம்பப் பிரமாதம்! அவ்வளவு அழகாகவும் பொருத்தமாகவும் உள்ளது உள்ளபடி எழுதியிருக்கும் உன்னை ஓடோடியும் வந்து அப்படியே கட்டிப் பிடித்து............! அதற்கு மேல் எப்படி நான் எழுதுவேனடி, ராதா? எனக்கு வெட்கமா யிருக்கிறது!

நாம் பெண்கள் என்று நீ குறைப்பட்டுக் கொள்ளாதே! வருங்காலம் பெண்களுக்குத் தான். நீடூழி காலம் நாம் தோழிகளாகவே இருக்க முடியும் என்ற நம்பிக்கை உனக்கு ஏன் இல்லை? நம் நட்புக்குப் பங்கம் ஏற்படும் என்றால், நான் விவாகமே செய்து கொள்ளாம லிருக்கவும் தயார்!

இன்னொன்று எழுத மறந்து விட்டேனே! நான் இந்த வாரக் கடைசியில் சென்னைக்கு வருகிறேன். காலை பம்பாய் மெயிலுக்கு வந்தால் என்னை நீ சந்திக்கலாம். உனக்கு முன்னதாகவே தந்தி கொடுக்கிறேன். உன்னுடன் இரண்டொரு நாள் தங்கிச் சந்தோஷமாய்ப் பொழுதைக் கழிக்க விரும்புகிறேன். மற்றவை நேரில்.

அன்புள்ள,
மாலினி.

தோழி சரளாவுக்கு,

சென்னையி லிருந்து நம் சங்கத்தில் சேர்ந்திருக்கும் தோழி ராதாவைப் பற்றி உனக்கு முன்பே எழுதி யிருக்கிறேன். நான் சென்னையில் ராதாவின் வீட்டில் ஒரு வாரம் இருந்து விட்டு நேற்றுத்தான் வந்தேன். எனக்கு ஏற்பட்டிருக்கும் உள்ளக் கிளர்ச்சியில் உனக்கு உடனே எழுத முடியவில்லை.

நான் என்னவென்று எழுதட்டுமடி, உனக்கு? நேரில் சொன்னால்தான் என் ஆவல் அடங்கும். பெரிய ஏமாற்றம் என் வாழ்க்கையில் சேர்ந்து விட்டது!

விஷயத்தைச் சொல்லி விடுகிறேனே! அந்த ராதா நாம் நினைத்தபடி பெண்ணல்ல. முழுப் பெயர் ராதாகிருஷ்ணனாம்!

அன்று நான் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் இறங்கியதும் அவரும் அவ தங்கையுமாகப் பிளாட்பாரத்தில் வந்து காத் திருந்தனர். அவர் தங்கையின் படம்தான் என்னிடம் இருக்கிறதே! அவளைக் கண் பிடித்துவிட்டேன். டாக்ஸியில் வீ போய்ச் சேர்ந்தோம். மறு நாள் காலையில் தான் இந்தப் பெரும் சூது எனக்குத் தெரிந்தது. ராதா என்ற பெயரில் எனக்கு வந்த கடிதங்கள் எல்லாம் ராதாகிருஷ்ணன் எழுதியவைதான். அவர் தங்கை பரம சாது. 'ராதாவின் கடித'த்தில் கண்ட குறும்பு தனத்தைக் கொஞ்சங்கூட அவளிடம் காண முடியவில்லை. அதற்குப் பதிலாக அவரிடம்......நான் என்ன சொல்லுவேன் ரொம்பக் குறும்புக்காரரடி அவர்!

அவர் எழுதிய கடிதங்களை நினைத்தால் அவர் முகத்தைப் பார்க்கவே எனக்கு வெட்கமா யிருக்கிறது. அவைகளுக்கு நான் எழுதிய பதில்களை நினைத்தால்... ஹூம்! போடி! அவர் என்னைப் பார் தால் ஓயாமல் சிரிக்கிறார்! தம்மைப் பெண்ணாகப் பாவித்துக்கொண்டு எழு அவர் ரொம்ப சிரமப்பட்டாராம். எப்படி யிருக்கிறது கதை?

இத்துடன் எங்கள் விவாக முகூர்த்தப் பத்திரிகை வைத்திருக்கிறேன். அவசிய நீ வரவேண்டும். கதைகளிலும் சினிமா களிலும் நடக்கும் சம்பவம் என் வாழ்க்கை யில் எதிர்பாராமல் நடந்திருக்கிறது.

அன்புள்ள,
மாலினி.

## பாட்டியின் வாக்கு பலித்தது!



---



# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

## இருபத்தோராம் அத்தியாயம்
## துன்பம் தொடர்ந்தது!

உலகத்தில் இந்தச் சமயம் யாருக்காவது, துயரமே உருவெடுத்த—வாழ்க்கையையே வெறுத்த—கவலைத் தீயில் வெந்து மாய்கின்ற — ஓர் ஆத்மாவைப் பார்க்க வேண்டுமென்று தோன்றினால் 'ஆல்பிரேட் பார்க்'குக்கு எதிரே தன் நினைவு இழந்து போய்க் கொண்டிருக்கும் வாலிபனைப் பார்க்கலாம். அவன் தன் கண்களுக்கு ஒரு கருநாகம் தென்பட்டால், அதை இரண்டு கைகளையும் நீட்டி ஆதரவுடன் எதிர்கொண்டழைக்கவும், அதன் விஷத்தை அமிர்தம் என்று எண்ணி அருந்தவும் கொஞ்சம்கூடத் தயங்கியிருக்க மாட்டான். ஏனெனில் அவனைத் தப்புவிக்கும் சக்தி அந்த தேவாமிர்தத்துக்கு இல்லை; ஆனால் விஷத்துக்கு இருந்தது. சாவு ஒன்றினால்தான் அவனுடைய கவலைகள் தீரக்கூடும். ஆனால் அந்தச் சாவுக்குக் கவலைகளைத் தீர்க்கக் கூடிய சக்தியிருந்ததே ஒழிய, அவச் சொல்லிலிருந்து அவனைக் காக்கக்கூடிய சக்தியில்லை. பொழுது விடிந்தால், மூலை முடுக்குகளில் எல்லாம், "சர்க்கார் பணத்தைக் கையாண்டானாம்; அதனால் பிடிபட்டானாம்; தற்கொலையும் செய்துகொண்டு விட்டானாம்!" என்ற அவச்சொல் காட்டுத் தீ போல் பரவிவிடும். குடும்பத்தின் கௌரவத்தையும் குட்டிச் சுவராக்கிவிட்டு, தானும் ஏளனத்துக்கும் அவச் சொல்லுக்கும் ஆளாகி, 'கவலையில் இருந்து விடுபட்டோம்' என்று எண்ணிக் கொண்டு சாவ[...]ல் என்ன பிரயோசனம்? ஆனால் அதை[...] விட்டால் வேறு வழி ஏதாவது தோன்ற[...]னால்தானே?

அவன் சங்கோசத்தை விட்டுப் பத்ம[...]விடம் தன் உண்மை நிலைமையைக் கூ[...]யிருந்தால், அவள் அனுதாபம் காட்டு[...]தோடு மட்டும் அல்லாமல், தனக்கு எத்த[...] தான் மன வருத்தம் ஏற்பட்ட பொழுதிலு[...] அவைகளைப் பொருட்படுத்தாமல் தன் நகைகளில் ஏதாவது ஒன்றைக் கழற்றி[...] கொடுத்திருப்பாள். அவனும் அதை எங்[...]யாவது அடகு வைத்துச் சர்க்கார் பண[...]தைக் கட்டித் தன் மானத்தைக் கா[...]பாற்றிக் கொண்டிருக்கலாம்.

இந்த எண்ணம் எழுந்ததும் ரமாநா[...] "இன்னும் ஒன்றும் குடிமுழுகிப் போய்வி[...]வில்லை. பத்மாவிடம் சொல்லியேவிடுவது!" என்ற முடிவுக்கு வந்து வீட்டுக்குத் திரு[...]பினான். ஆனால் நடையில் வேகம் இல்லை[...] மனத்தில் வேகம் இருந்தால் அல்லவ[...] நடையில் அது பிரதிபலிப்பதற்கு? அவ[...] மனம் தயங்குவது போல நடையும் த[...]மாறிற்று.

வீடு வந்து சேர்ந்த பின் "அவ[...]டம் சொல்லி விடுவது என்றுதா[...] தீர்மானித்து விட்டோமே! இனிமே[...] அவசரப் படுவானேன்? வேண்டு

பொழுது கேட்டு வாங்கிக் கொண்டால் போயிற்று! அவள் தர மாட்டேன் என்று சொல்லிவிடப் போகிறளா, அதற்கு?" என்று அவன் மனதைச் சமாதானப்படுத்திக்கொண்டான். சிறிது நேரம் அவன் உட்கார்ந்து வீண் வம்பு அடித்தான். பிறகு சாப்பிட்டுவிட்டுப் படுத்த அவனுடைய மூளைக்குப் 'பளிச்' சென்று ஒரு யோசனை தோன்றிற்று. "அவளுக்குத் தெரியாமல் ஏதாவது ஒரு நகையை எடுத்துக் கொண்டு விட்டால் என்ன?" என்பதுதான் அந்த யோசனை. ஒரு தடவை அவன் தன் குடும்ப கௌரவத்தைக் காப்பதற்காக அப்படிச் செய்யவில்லையா? அதே மாதிரி தன் உயிரைக் காத்துக் கொள்ளவும் அவன் ஏன் செய்யக்கூடாது?

"...ஆமாம், பத்மா நடுவில் விழித்துக் கொண்டு விட்டால் ...?" என்ற பயம் அவனைச் சூழ்ந்து கொண்டது. ஆனால் அடுத்த கணமே, "அப்படி அவள் எழுந்திருந்து விட்டால், நாம் ஏதாவது குளம் குட்டையில் விழுந்து உயிரை விட்டுவிடுவோம்! சாவது என்பதுதான் தீர்மானமாயிற்றே!" என்ற தைரியம் அவன் உள்ளத்தில் பிறந்தது. ஆகையால் "எதற்கும் ஒரு தடவை முயற்சித்தே பார்ப்போம்" என்ற திடசங்கல்பத்துடன், அவன் தன் மார்பின் மீதிருந்த பத்மாவின் கையை மெதுவாக நகர்த்திவிட்டு, எழுந்து கீழே இறங்குகின்றான். "கையை நகர்த்தினதும் பத்மா விழித்துக் கொண்டு விட்டாளோ!" என்ற திகில் அவனைச் சூழ்ந்து கொண்டது. அப்புறம் அது வெறும் பிரமை என்பதை உணர்ந்தான். அவளுடைய தலையணையின் அடியிலிருந்து மெதுவாக ஓசைப்படாமல் எப்படியாவது சாவிக் கொத்தை எடுத்தாக வேண்டும். தாமதம் கூடவே கூடாது. ஏனெனில் தூக்கத்திலும் மனிதனுடைய உள் உணர்ச்சி தூங்குவதில்லை. எந்த நிமிஷமும் அவள் விழித்துக்கொண்டு விடலாம். நன்றாகத் தூங்கும் சின்னஞ் சிறு குழந்தை கூடப் பக்கத்தில் படுத்திருக்கும் தாயார் எழுந்து விட்டால் விழித்துக்கொண்டு விடுகிறதல்லவா?

அவன் சாவிக் கொத்தை எடுப்பதற்காகக் குனிந்ததும், பத்மா சிரிப்பது போலத் தோன்றவே, கையைச் 'சட்'டென்று இழுத்துக் கொண்டான். பிறகு விளக்கின் மங்கிய ஒளியில் பத்மாவின் முகத்தைக் கூர்ந்து கவனித்தான். அவள் ஏதோ இன்பக் கனவு கண்டு சிரித்திருக்க வேண்டும் என்று அவனுக்குப் பட்டது. இவளிடமா நமது ஏமாற்று வித்தைகளையெல்லாம் காட்ட வேண்டும்? இவளுக்காக நாம் உயிரைக் கூடக் கொடுக்கத் தயாராயிருக்க வேண்டுமே!

பத்மாவின் கள்ளங் கபடமற்ற அன்பே உருவெடுத்த முகம் அவன் மனக் கண்முன் தாண்டவமாடியது. "தன்னுடைய நகை திருட்டுப் போய் விட்டது!" என்ற செய்தி தெரிந்ததும் அவள் மனம் என்ன பாடுபடும்? தலை மயிரைப் பிய்த்துக் கொண்டு கதறுவாளே! அந்தக் கண்ணராவியையெல்லாம் என் கண்களால் பார்க்க வேண்டுமா? ... நமக்கு வாழ்க்கைப் பட்டு அவள் என்ன சுகத்தைக் கண்டு விட்டாள்? வேறு யாருக்காவது வாழ்க்கைப்பட்டிருந்தால், அப்படியே அவளுக்கு ரத்தினக் கவசமே செய்து போட்டிருப்பான். துரதிருஷ்டக்காரனை என்னைக் கல்யாணம் செய்து கொண்டதனால்தானே அவளும் என்னுடன் சேர்ந்து அழும்படியாகிவிட்டது! பாவம், அவள் ஒரு சுகத்தையும் கண்டறியாள்!

இவ்வாறெல்லாம் எண்ணிக் கொண்டே அவன் மறுபடியும் கட்டிலில் படுத்துவிட்டான். அவன் படுத்துக் கொண்ட சிறிது நேரத்துக்கெல்லாம் பத்மா விழித்துக் கொண்டாள். அவள் அவனுடைய முகத்தைப் பார்த்து, "நீங்கள் எங்கே போய் விட்டீர்கள்? நான் ஒரு நல்ல சொப்பனம் கண்டேன். ஒரு பெரிய தோட்டம்; நீங்களும் நானும் உலாவப் போயிருக்கிறோம். நீங்கள் என்னைத் தனியே விட்டு விட்டுப் போய் விடுகிறீர்கள். அதற்குள் பார்ப்பதற்குத் தேவனை போன்ற ஒரு சந்நியாசி என்னிடம் வந்து, 'அம்மா குழந்தாய், உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள், தருகிறேன்' என்கிறார். 'என்ன வரம் கேட்கலாம்' என்று உங்களைக்கேட்க எண்ணி நான் 'தேடு, தேடு' என்று தேடுகிறேன். தோட்டம் பூராவும் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்தும் நீங்கள் அகப்படவில்லை. எங்கேதான் அப்படிப் போய் ஒளிந்துகொண்டு விட்டீர்களோ, புரியவில்லை. உங்களைத் தேடுவதற்குள்ளேயே தூக்கம் கலைந்து விட்டது. நான் வரம் கேட்க முடியாமல் போய்விட்டது!" என்றாள்.

ரமாகாந் சிரித்துக் கொண்டே, "ஆமாம், நான் இருந்திருந்தால் நீ என்ன வரம் கேட்டிருப்பாய்?" என்று கேட்டான்.

''நான் என்ன கேட்டால், உங்களுக்கு என்ன ?''

''நீ சொல்லாவிட்டால் வேண்டாமே ! நீ என்ன கேட்டிருப்பாய் என்றுதான் எனக்குத் தெரியுமே !

''என்ன கேட்டிருப்பேன் ? சொல்லுங்களேன், பார்க்கலாம்.''

''நிறையப் பணம் வேண்டுமென்று கேட்டிருப்பாய் !''

''நீங்கள்தான் என்னவோ 'பணம், பணம்' என்று அடித்துக் கொள்ளுகிறீர்கள். உங்களுக்குத்தான் பணம் பெரிதாய்த் தோன்றுகிறது. எனக்கு ஒன்றும் பணம் பெரிதாகத் தோன்றவில்லை.''

''எனக்குப் பெரிதாகத் தோன்றுகிறது, அம்மா ! இந்த உலகத்திலே பணம் இல்லாமல் வாழ்வதைக் காட்டிலும் சாவதே மேல். உன்னிடம் வந்தது போல என்னிடம் மட்டும் ஒரு தேவதை மாட்டிக் கொண்டு விட்டால், நிறையப் பணம் வாங்கிக் கொள்ளாமல் அதை விடவே மாட்டேன். நான் தங்கச் சுவர்கள் எழுப்பவோ, ராக்பெல்லர், கார்னேகியைப் போல ஆகவோ விரும்பவில்லை. தேவையான வஸ்துக்களை வாங்குவதற்கு வேண்டிய பணத்துக்குச் சிரமமே ஏற்படக் கூடாது என்பதுதான் என் ஆசை. ஏதாவது ஒரு தேவதை எனக்கு ஐந்து லட்ச ரூபாய் கொடுத்து விட்டால், அப்புறம் நான் கேட்கவே மாட்டேன். நம்முடைய இந்த ஏழை நாட்டிலேகூட எத்தனையோ தனவான்களும் ஜமீன்தார்களும் ஒரு வருஷத்துக்கு ஐந்து லட்சம் செலவழிக்க வில்லையா ? சிலருக்கு இந்த ஐந்து லட்சம் ஒரு மாதத்துக்குக் கூடப் போதும் போதாமல் இருக்கிறது. நான் அந்த மாதிரி யெல்லாம் ஆசைப்படவில்லை. எனக்கு ஐந்து லட்சம் கிடைத்து விட்டால், அப்புறம் ஏழேழு ஜன்மத்துக்கும் கேட்க மாட்டேன். ஆனால் யாராவது கொடுத்தால்தானே ? அது கிடக்கட்டும், நீ என்ன கேட்டிருப்பாய் ? சொல்லு ! நல்ல நல்ல நகைகளா ?'' என்று கேட்டான் ரமாகாந்.

பத்மா புருவத்தை உயர்த்திக்கொண்டு, ''எதற்காக இப்படி என்னைக் குத்திக் காட்டுகிறீர்கள் ? நான் மற்றப் பெண்களைப் போல 'எனக்கு இன்னின்ன நகைகள் வேண்டும் ?' என்று உங்களைக் கேட்டு நச்சரித்திருக்கிறேனா ? எதற்காக என்மீது இப்படி அபாண்டம் சுமத்துகிறீர்கள். உங்களுக்கு வேண்டுமானால் இந்த நகைகளை எடுத்துப் போங்கள். நான் இப்பொழுதே தரத் தயார் !'' என்றாள்.

ரமாகாந் புன்முறுவலுடன், ''அப்படியானால் ஏன் சொல்லமாட்டேன் என்கிறாய் ?'' என்று கேட்டான்.

''என் கணவர் எப்பொழுதுமே என்னிடம் ஆசையாக இருக்கவேண்டும். அவர் மனம் ஒருபொழுதும் மாறக்கூடாது என்று தான் கேட்டிருப்பேன்.''

ரமாகாந் சிரித்துக்கொண்டே, ''உனக்கு இந்தச் சந்தேகம் எழுவானேன் ?'' என்று கேட்டான்.

''நீங்கள் தேவதையா யிருந்தால் எனக்குச் சந்தேகம் எழுவதற்கு நியாயம் இல்லை. ஆனால் நீங்களும் எல்லாரையும் போல மனிதர்தானே ! உங்களை எப்படி நம்புவது? தன் கணவன்மார்களுடைய கல் நெஞ்சத



தையும், தான் படும் கஷ்டங்களையும் சொல்லாத ஒரு பெண்ணைக்கூட நான் இன்று வரை பார்த்ததில்லை. இந்த ஆண் பிள்ளைகளோ இரண்டொரு வருஷம்தான் மனைவியிடத்தில் உயிராயிருப்பார்கள். அப்புறம் அவர்களுடைய மனம் சலித்துவிடுகிறது. 'வேண்டாத பெண்டாட்டி கை பட்டால் குற்றம்; கால் பட்டால் குற்றம்' என்ற கதையாக நடந்துகொள்ள ஆரம்பித்து விடுகிறார்கள். பெண்களுக்கு இதைத் தவிர வேறு என்ன கஷ்டம் வேண்டும்? இந்தக் கஷ்டத்திலிருந்து தப்புவதற்குத் தான் முதலில் நான் அத்தமாதிரி வரம் கேட்க வேண்டுமென்று இருந்தேன்!" என்று சொல்லிக் கொண்டே பத்மா தன் கணவனுடைய கழுத்தில் கையைப் போட்டுக் கொண்டு, காதல் ததும்பும் பார்வையுடன் அவனைப் பார்த்தவாறே,



"ஆமாம், நான் உங்களை ஒன்று கேட்கிறேன்; பொய் சொல்லக் கூடாது. நீங்கள் முன்போல் என்னுடன் பிரியமாக நடந்து கொண்டு வருகிறீர்களா? மனச் சாட்சிக்கு விரோதமில்லாமல் மறைக்காமல் சொல்லுங்கள்!" என்றாள்.

ரமாகாந் தன் கைகளினால் அவளுடைய தலை மயிரை வருடியவாறே, "முன்னைக் காட்டிலும் பன்மடங்கு அதிகப் பிரியத்துடன்தான் நடந்து கொள்கிறேனாக்கும்!" என்றான்.

பத்மா சிரித்துக் கொண்டே, "ஆமாம்; எதற்கு இந்தப் பொய்? நீங்கள் சொல்லுவது பொய் என்றுதான் எனக்குத் தெரியுமே!" என்றாள்.

"உனக்குத்தான் தெரிகிறதே! அப்புறம் என்னைக் கேட்பானேன்? என்னைப் பற்றி நீ இவ்விதம் எண்ணக் காரணம் என்ன?" என்று கேட்டான் ரமாகாந்.

"நீங்கள் இப்பொழுதெல்லாம் என்னுடன் நடந்துகொள்ளும் விதம் என்னை அப்படி எண்ணச் சொல்லுகிறது. எப்பொழுது பார்த்தாலும் எங்கேயாவது வெளியே போய்விடுகிறீர்கள். ஒரு நிமிஷம்கூட என்னுடன் மனம் விட்டுப் பேசவதில்லை. உங்களுக்கு என்மீது அன்பு இருக்குமானால் நம்பிக்கையில்லாமல் இருக்குமா? நம்பிக்கையில்லாத இடத்தில் அன்பு வாசம் செய்யாது. சுகத்தையும் துக்கத்தையும், கஷ்டத்தையும் சிரமத்தையும் மனம் விட்டு சொல்லக்கூடிய ஒருத்தியிடத்தில், நீங்கள் மூடி மூடி வைப்பது கொஞ்சங்கூட நன்றாயில்லை. அப்படி மூடி வைத்தால் உங்களுக்கு அவள்மீது அன்பு இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஏதோ இப்படியெல்லாம் சொல்லுகிறேனே என்று நீங்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது. சிலர் சிற்றின்ப சுகத்துக்காக வேசிகளை நாடுகிறார்களே, அதுபோல நீங்கள் என்னையும் சிற்றின்பக் கேளிக்கைக் கான பாத்திரம் என்று நினைக்கிறீர்களோ, என்றுகூடத் தோன்றுகிறது. ஏனென்றால் வேசிகளிடத்தில் யாரும் தன் மனதில் உள்ளதை விட்டுச் சொல்லுவதற்காகப் போவதில்லை. சிற்றின்ப சுகம் காரணமாகத்தான் போகிறார்கள். நம் இருவர் நிலைமையும் அது போலத்தானே இருக்கிறது! உண்மையைச் சொல்லுங்கள், மறைக்காதீர்கள்! உங்களுடைய மனம் ஏதோ கவலையினால் பீடிக்கப்பட்டிருக்கிறது என்பது எனக்குத்

தெரியாமல் இல்லை. நீங்கள் பேசும்பொழுதும் நான் நன்றாகக் கவனித்திருக்கிறேன். உங்கள் கவனம் பேச்சிலேயே செல்லுவதில்லை. வேறு எதோ சிந்தனையில் லயித்துவிடுகிறீர்கள். சாப்பிடும்பொழுதும் ருசித்துச் சாப்பிடுவதில்லை; ஏதோ கடனுக்காகத்தான் சாப்பிடுகிறீர்கள். 'பருப்புக்கு உப்புப் போதுமா, போதாதா? கறி நன்றாயிருக்கிறதா, இல்லையா? சாதம் அரிசியாகவே இருக்கிறதா, அல்லது குழைந்துவிட்டதா?' என்பது போன்றவற்றை நீங்கள் கவனிப்பதேயில்லை. ஏதோ வருகிறீர்கள்; சத்திரத்தில் சாப்பிடுபவனைப் போலச் சாப்பிட்டு விட்டுப் போகிறீர்கள். இவையெல்லாம் எனக்குத் தெரியவில்லை என்று எண்ணுகிறீர்களா, அல்லது இவற்றையெல்லாம் நான் கவனிக்க வேண்டியது அனாவசியம்; நான் போக பாக்கியங்களை அனுபவிக்கப் பிறந்தவள்; அதை மட்டும் அனுபவித்துக் கொண்டு ஆனந்தமாக வாழ்க்கையை ஓட்டுவது மட்டும்தான் என் கடமை; உங்கள் கவலைகளைப் பகிர்ந்துகொள்ள எனக்கு உரிமையில்லை என்பதுதான் உங்கள் அபிப்பிராயமா? ஆனால் கடவுள் எனக்கு அந்தமாதிரி இதயத்தைக் கொடுக்கவில்லையே! நான் என்ன செய்வது? உங்களுடைய முகம் கோணாமல், உங்களுடைய ஆசைகளைப் பூர்த்தி செய்யும் ஒரு யந்திரமாக இருந்து கொண்டு, வாழ்க்கையை நடத்திக்கொண்டு போக வேண்டியதுதான் என் கடமையென்றால், நான் அனாவசியமாக இந்த சிரமங்களையெல்லாம் ஏற்றுக் கொள்ளுவானேன்?'' என்றாள் பத்மா.

இதுவரை பத்மா தன் மனதைத் திறந்து ரமாகாந்தினிடம் பேசியதேயில்லை. ஆகையால் ரமாகாந்துக்கு அவள் இவ்வளவு யோசனையுள்ளவளாக இருப்பாள் என்ற எண்ணமே அதுகாறும் எழுந்ததில்லை. அவன் அவளை உண்மையில் 'அழகி' என்று மட்டும்தான் எண்ணி வந்தான். மற்ற ஆண்களைப் போல, அவனும் தன் மனைவியின் ரூபலாவண்யத்திலும் யௌவனத்திலும் லயித்திருந்தானே தவிர, அவளுடைய ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிந்து கொள்ள முயன்றதேயில்லை. அது மட்டும் அல்ல, அவளுக்கு ஆத்மா என்று ஒன்று இருப்பதாகக்கூட அவன் எண்ணியதில்லை. அவளுக்கு அந்த ரூபலாவண்யம் மட்டும் இல்லாமலிருந்தால் அவளுடன் அவன் சரியாக முகம் கொடுத்துக்கூடப் பேசியிருக்க மாட்டான். அவளுக்கு அவளிடம் ஒரு கவர்ச்சியும் ஈடுபாடும் ஏற்பட்டதற்கு அவளுடைய அழகு மயக்கம் ஒன்றேதான் காரணம். இன்றுவரை அவன் பத்மாவை, 'அழகி' என்று மட்டும் எண்ணி வந்ததால், தான் படும் கவலைச் சுமையை அவள்மீது சுமத்த விரும்பவில்லை. இன்றுதான் அவனுக்கு 'பத்மாவும் தன்னைப்போல உள்ளம் என்ற ஒரு வஸ்துவைப் படைத்தவள்' என்று தெரியவந்தது. தன் மனத் துயரத்தை அவளிடம் சொல்ல ஓர் அரிய சந்தர்ப்பமும் அவனுக்குக் கிடைத்தது. ஆனால் அந்தப் பாழும் சங்கோசம்! அவனை வாய் திறக்க விட்டால்தானே?

இவ்வளவு நாட்களாக மூடி மூடி வைத்து வந்த விஷயத்தை அவளிடம் எப்படிச் சொல்லுவது? அப்படிச் சொன்னால், பத்மா சாட்டிய குற்றங்களையெல்லாம் தான் ஏற்றுக் கொண்டதாக அல்லவா ஆகிவிடும்! இன்றுதான் அவன் கண்களை மறைத்திருந்த பிரமை என்னும் திரை விலகியது. 'சிற்றின்பங்களைக் கொண்டு காதற் கோயிலை நிர்மாணித்துவிட முடியும் என்பது வெறும் மதியீனம்' என்பது இன்றுதான் அவனுக்குப் புலனாயிற்று.

ரமாகாந்த் இதே போன்ற யோசனைகளில் மூழ்கிக் கண்ணயர்ந்து விட்டான். அப்பொழுது நடுநிசி கழிந்துவிட்டது. 'விடியற்காலையில் எழுந்திருந்து விடவேண்டும்' என்ற எண்ணத்துடன்தான் அவன் தூங்க ஆரம்பித்தான். ஆனால் காலை இளஞ் சூரியனது செக்கிறக் கிரணங்கள், அவனுடைய அறையில் புகுந்து தட்டி எழுப்பிய பின்தான் அவனுக்கு விழிப்புக் கொடுத்தது. எழுந்ததும் அவன் அவசர அவசரமாகச் சட்டையை மாட்டிக்கொண்டு பல்கூடத் தேய்க்காமல் வெளியே புறப்படலானான். 'ரமேஷ் பாபுவிடம் போய் தன்னுடைய கஷ்டத்தை இன்னுமொரு தடவை சொன்னால், அவர் மனமிரங்கி ஒத்தாசை செய்ய முன் வரமாட்டாரா?' என்ற சபலம் அவனை இன்னும் விட்டபாடில்லை.

பத்மா அப்பொழுது சமையலறை வேலையில் ஈடுபட்டிருந்தாள். ரமாகாந்த் அப்படி அவசர அவசரமாகப் புறப்படுவதைக் கண்ட அவள், கேள்விக் குறி தோன்றும் கண்களுடன் அவனைப் பார்த்தாள். அவனுடைய முகத்தில் கவலை, அச்சம், சஞ்சலம், துயரம், பயம் எல்லாம் ஒருங்கே படர்

திருப்பதைக் காண அவனுடைய மனதை என்னவோ செய்தது. ஒரு கையில் கத்தியும் இன்னொரு கையில் பாகற்காயும் வைத்து நறுக்கிக் கொண்டிருந்த அவள் அப்படியே ஸ்தம்பித்துப் போய்க் கறி நறுக்குவதை நிறுத்திவிட்டு, வாசற்படி தாண்டிக் கொண்டிருந்த ரமாகாந்தையே உற்றுப் பார்க்கலானாள். என்ன விஷயமோ? தெரியவில்லையே! 'நம்மிடம்கூடச் சொல்லாமல் மூடி மூடி வைக்கிறாரே! நம்மால் அவருக்கு ஒரு உதவியும் செய்ய முடியாமற் போனாலும், நாமும் அவருடன் சேர்ந்துகொண்டு கவலையாவது படலாமல்லவா! எதற்கும் அவரைக் கூப்பிட்டுக் கேட்டுவிட்டால் என்ன?' என்று எண்ணி அவள் வாசற் பக்கம்கூட வந்தாள். ஆனால் அதற்குள் ரமாகாந்த் தெருவில் இறங்கி நான்கைந்து வீடுகள் தாண்டி விட்டான்.

அவன் அக்கம் பக்கம் பாராமல், எதிரே வரும் வண்டிகளையோ, மனிதர்களையோ சிறிதும் பொருட்படுத்தாமல், குருட்டாம்போக்கில் ஒரு பித்தனைப் போல வெகு வேகமாக நடையை எட்டிப் போட்டுக் கொண்டிருந்தான். தன் கண்களுக்கு மறையும் வரையில் பத்மா அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு உள்ளே வந்து கறி நறுக்க உட்கார்ந்தாள். ஆனால் அவளுடைய மனம் மட்டும், 'என்னிடம் கூடச் சொல்லாமல் இப்படி மறைக்கிறாரே! அப்படி என்ன விஷயமாயிருக்கும்?' என்ற கேள்வியிலேயே சுழன்று கொண்டிருந்தது.

ரமாகாந்த் ரமேஷ்பாபுவின் வீட்டை யடையும்பொழுது மணி எட்டு அடித்து விட்டது. ரமேஷ்பாபு ஒரு பலகையில் உட்கார்ந்து கொண்டு சந்தியாவந்தனம் செய்து கொண்டிருந்தார். ரமாகாந்தைப் பார்த்ததும் அவர் ஜாடை காட்டி உட்காரும்படி சொன்னார். அரை மணிக்கெல்லாம் அவருடைய ஜபதபாதிகள் முடிந்தன. "ஆமாம், நீ இன்னும் பல்கூடத் தேய்க்கவில்லை போலிருக்கிறதே! இந்த மாதிரி அசட்டுத்தனங்கள் எல்லாம் எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிப்பதில்லை. 'தேகத்தைக் கூடச் சுத்தமாக வைத்துக்கொள்ளக் கூடாது!' என்று உன்னுடைய மேனாட்டு நாகரிகம் சொல்லுகிறது! சரி, அது கிடக்கட்டும், பணத்துக்கு ஏதாவது ஏற்பாடு செய்து விட்டாயா?" என்று கேட்டுக் கொண்டே எழுந்து அவனருகில் வந்தார் ரமேஷ்பாபு.

(தொடரும்)

# காலக்ஷேபம்

### போட்டிதான்!

முதல் கைதி:—என் அண்ணே, நீ என்ன காரணத்துக்காக ஜெயிலுக்கு வந்தாய்?

இரண்டாவது கைதி:— காரணம் பிரமாதமாக ஒன்றுமில்லே, அண்ணே! சர்க்காரோடு நான் போட்டி போட்டதுக்காக என்னைத் தண்டித்தாங்க!

முதல் கைதி:—என்ன அண்ணே இது! நீ சொல்லுவது புரியவில்லையே! சர்க்காரோடு போட்டியா!

இரண்டாவது கைதி:—ஆமாம், அண்ணே! நான் செய்த ரூபாய் நோட்டு சர்க்கார் நோட்டுமாதிரியே இருந்ததாம்!

★

### பிடிக்கும் விஷயம்!

மனைவி:—ரொம்ப சந்தோஷமாயிருக்கு. நீங்கள் எனக்கு நகை வாங்கிப் போட்டிருக்கிறது! இன்னும் பிடிக்கிறதாக வாங்கணும்?

புருஷன்:—என்னடி! நீ கேட்டதென்ன? உனக்குப் பிடிக்கிற நகைதானே வேணும் என்று கேட்டாய்!

★

### ரேஷன் காலம்

டாக்டர் (நோயாளியைப் பரிசோதித்து விட்டு):—உங்கள் வியாதிக்கு அரிசி சாப்பாடு உதவாது. வேணுமானால் கஞ்சி சாப்பிடலாம்.

நோயாளி (திருப்தி குறியுடன்):—அப்படியானால் இந்த வியாதி இன்னும் கொஞ்ச காலத்துக்கு நீடித்து இருக்குமா?

★

### சரிதான்!

உபாத்தியாயர்:—என்னடா கிட்டு, ராமுவும் சோமுவும் ஒருவரை யொருவர் அடித்துக் கொள்கிறார்களே, ஏன்?

கிட்டு:—அவர்கள் இரண்டு பேரும் பேசுவ தில்லை, ஸார்!

★

### அவர் சொன்னது!

ராமு (அடுத்த வீட்டுக்காரரிடம்):—மாமா! எங்கப்பா கொஞ்சம் மண்வெட்டி வாங்கிக் கொண்டு வரச் சொன்னார்.

அடுத்த வீட்டுக்காரர்:—இன்னும் உங்கப்பா என்னடா சொன்னார்?

ராமு:—'அந்த அற்பப் பயல் இல்லேன்னுட்டா, கோடியாத்து முத்து மாமாவிடம் போய் வாங்கி வா!' என்று சொன்னார்!




# வினோலியா ஒயிட் ரோஸ் சோப்

VWR. 22-23 TM

VINOLIA COMPANY LIMITED, LONDON, ENGLAND

No. 5.

# அவர்கள் ஆரோக்கியமாகவும் பலசாலிகளாகவும் வளரச் செய்யுங்கள்

இந்தியாவின் உணவுகள் முக்கியமாக தென்னிந்திய உணவுகள் போஷிப்பு சத்து குறைந்ததாக இருக்கிறதென்றும் அவைகளை குழந்தைகளுக்கு அளிப்பதால், குழந்தைகள் புஷ்டியுடன் வளர்வதில்லை என்றும் உணவு சத்துப் பொருள்களை ஆராய்ந்தறிந்த அறிஞர்கள் கூறுகிறார்கள்.



மெக்லெக் குழந்தைகளின் உணவு, மெக்லெக் சிரப் கால்விடக் ஆகிய இரண்டும் உணவுகளில் இருக்கும் குறைகளை சரிசெய்யும் உயர்ந்த சத்து நிறைந்தவைகள். மெக்லெக் குழந்தைகளின் உணவில் போஷணை யளிக்கும் புரோடீனும், குளுகோஸ் காய்கறிச் சத்துப்பொருளும் இருக்கின்றன. மெக்லெக் சிரப் கால்விடக் என்பது, முக்கியமான விடமின்களும், உலோகசத்துக்களும் நிறைந்தது. குழந்தைகளுக்கு இப்படிப்பட்ட போஷிப்பு உணவுகளைக் கொடுத்தல் உங்கள் கடமையாகும். சீக்கிரமே குழந்தைகள் பலமும் ஆரோக்கியமும் பெற்றுவிடுகிறார்கள்.

உணவுக்குறைகளை சரிசெய்ய மெக்லெக் நியூட்ரிமென்ட்ஸ் உபயோகமானவைகள் என்று போஷிப்புணவு நிபுணர்கள் கூறியுள்ளார்கள்.

மெக்லெக் நியூட்ரிமென்ட்ஸ் சத்தும் சாரமும் நிறைந்த உணவே தவிர மருந்தோ அல்லது மருந்து வகைச் சரக்கோ அல்ல.

மெக்லெக் போஷிப்பு சத்துக்கள், உங்கள் உணவில் குறையாய் உள்ள உணவுச்சத்துக்களை அளிப்பவை.



மெக்லெக் குழந்தைகளின் உணவு தேவையான புரோடீன் சத்தினை அளிக்கிறது.

சிரப் கால்விடாக் தேவையான விட்டமின் உள்ள உணவு சத்தினை அளிக்கின்றது.



**மெக்லெக்**
**நியூட்ரிமெண்ட்ஸ்**

உணவில் குறைபாடுள்ள உணவு சத்துக்களை அளிப்பவை.

விவரங்களுக்கு கீழ்க்கண்டவர்களுக்கு எழுதுங்கள்:

ஸ்ரீ மெக்லெக் நியூட்ரிமென்ட்ஸ் அண்ட் பார்மஸூடிகல்ஸ் லிமிடெட்

99-A. ஆர்மீனியன் தெரு, ஜி. டி. மதராஸ்

MNP. 48 Tamil.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-M9, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk Madras.

# கோகுல்

சந்தனத் தைலம்

அரைக்கீரை விதைத் தைலம்

கூந்தல் தைலம்







எங்கள் தயாரிப்புகள் ஒவ்வொன்றிலும் கோகுல் டிரேட் மார்க் இருப்பதை கவனியுங்கள்.

**டி.எஸ்.ஆர் & கோ**
**கும்பகோணம்.**

மதராஸ் ஏஜண்டு:
புஷ்பவனம் ஸ்டோர்ஸ்
பைகிராப்ட்ஸ் ரோடு,
திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள்
& பாலக்காடுக்கு ஏஜண்டு:
B. பாலபட்டாபி,
வைசியாள் தெரு, கோயமுத்தூர்



# பிஸ்மாக் சாப்பிடுவதில் அசிரத்தை வேண்டாம்

அதைச் சாப்பிட பயப்படுகிறீர்களா? மந்த உணர்ச்சி, அஜீர்ணம் மற்றும் இதர வயிற்றுக் கோளாறுகளினால் நீங்கள் அவஸ்தைப் பட்டால்—ஒவ்வொரு தடவையும் போஜனத்திற்குப் பின் பிஸ்மாக் சாப்பிடுங்கள். அந்த உபாதைகள் சீக்கிரம் நீங்கிவிடும்.

பிஸ்மாக் (பைசரேட்ட் மக்னீஷியா) மாத்திரையாகவோ, பௌடராகவோ சாப்பிட வெகு சுகமாயிருக்கும். அதுவுமல்லாமல் வயிற்றுக் கோளாறுகளை யெல்லாம் உடனடியாக நிவர்த்தி செய்கிறது.

உபயோகமற்ற போலிகளை வாங்காதீர்கள்! பிஸ்மாக் கேட்டுக் கொண்டு நல்ல ஜீரண சக்தி அடையுங்கள். மாத்திரையாகவும் பௌடராகவும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.




**BISMAG**

இந்தியாவுக்கு பூரண விநியோகஸ்தர்கள்:
ஜியோப்ரே மானர்ஸ் & கம்பெனி லிமிடெட்
பம்பாய், கல்கத்தா, சென்னை, லாகூர்

REGD. NO. M. 4392

License No. 18
Licensed to post without prepaymen